# ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம்

எழுமின், விழிமின், குறிசாரும்வரை நில்லாது செல்மின்! — சுவாமி விவேகானந்தர்

தொகுதி 57 | பிங்கள ௵ ஐப்பசி ௴ | இதழ் 10



ஸ்ரீ ராமகிருஷ்ண மடம்

# ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம்

| தொகுதி—57 | பிங்கள ஸூ ஐப்பசி மீ | இதழ்—10 |
|---|---|---|

## பொருளடக்கம்

பக்கம்









# ஸ்ரீராமகிருஷ்ண விஜயம்

ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்
நன்றே நினைமின் நமன்இல்லை

— திருமூலர்


| தொகுதி 57 | பிங்கள ஆ ஐப்பசி மீ | இதழ் 10 |
|---|---|---|


## பிரார்த்தனை

दुर्गे स्मृता हरसि भीति-मशेष-जन्तोः
स्वस्थैः स्मृता मतिमतीव शुभां ददासि ।
दारिद्र्य-दुःख-भयहारिणि का त्वदन्या
सर्वोपकार-करणाय सदाऽऽर्द्र-चित्ता ॥ — श्रीदेवीमाहात्म्यम्

துர்க்கே ஸ்ம்ருதா ஹரஸி பீதி — மசேஷ — ஜந்தோ:
ஸ்வஸ்தை: ஸ்ம்ருதா மதிமதீவ சுபாம் ததாஸி |
தாரித்ர்ய — து:க்க — பயஹாரிணி கா த்வதன்யா
ஸர்வோபகார — கரணாய ஸதார்த்ர — சித்தா ||

—ஸ்ரீ தேவீ மாஹாத்மியம்

கடத்தற்கரிய கஷ்டத்தில் நினைக்கப்பட்டால் நீ எல்லா ஜீவர்களுடைய பயத்தையும் போக்குகிறாய். இன்பத்தில் நினைக்கப்பட்டால் நலன் மிக்க மதியை அளிக்கிறாய். ஏழ்மையையும், துன்பத்தையும், பயத்தையும் போக்குபவளே! எல்லோருக்கும் உபகாரம் செய்ய எப்போதும் உருகும் நெஞ்சுடையவர் உன்னைத் தவிர வேறு யார் இருக்கிறார்கள்?

தனம்தரும் கல்விதரும் ஒரு
நாளும் தளர்வறியா
மனம்தரும் தெய்வ வடிவும்
தரும்நெஞ்சில் வஞ்சம் இல்லா
இனம்தரும் நல்லன எல்லாம்
தரும் அன்பர் என்பவர்க்கே
கனம்தரும் பூங்குழலாள் அபி
ராமி கடைக்கண்களே.

— அபிராமிபட்டர்.



# ஸ்ரீ ராமகிருஷ்ணரின் அருள் வாக்கு

கற்பாறைக்குள் தண்ணீர் எந்தக் காலத்திலும் நுழைய முடியாது. அதைப்போல, மத போதனைகள் பந்தப்பட்ட ஜீவனிடம் ஒரு சிறிதும் பதிவதில்லை.

மிருதுவான களிமண்ணில் எந்த உருவமும் மிகச் சுலபமாகப் பதிந்துவிடும். ஆனால் கருங் கல்லிலோ ஓர் உருவமும் பதியாது. அதுபோல, ஒரு பக்தனின் இதயத்தில் தெய்வீக ஞானம் தானாகவே பதிகிறது. பந்தப்பட்ட மனிதனின் உள்ளத்தில் பதிவதில்லை.

கற்பாறைக்குள் இரும்பு ஆணியைச் செலுத்த முடியாது. ஆனால் மண்தரைக்குள் அதை மிகச் சுலபமாகச் செலுத்தி விடலாம். அதேபோல, தெய்வீக போதனைகள் இலௌகிக மனித னிடம் எந்தவித பயனையும் உண்டாக்குவதில்லை. ஆனால் தெய்வ நம்பிக்கை உள்ளவர்களின் இத யத்தில் அந்த போதனைகள் மிகச் சுலபமாக வெகு ஆழத்தில் சென்று பதிகின்றன.

வேகாத களிமண்ணைக் கொண்டு குயவன் பலவித வடிவங்களில் சட்டிகளையும் பானை களையும் செய்கிறான். ஆனால் ஒருமுறை சுடப்பட்டு விட்டாலோ, அந்த மண்ணைக்கொண்டு புதி தாக அவனால் ஒன்றும் செய்ய முடியாது. அதேபோல, உலக ஆசைகள் என்னும் நெருப்பால் வெந்துபோன ஒருவனின் உள்ளத்தில் உயர்ந்த தெய்வீக மனோபாவங்கள் உண்டாகாது. அப்படிப் பட்ட உள்ளத்துக்கு ஓர் அழகிய வடிவத்தைக் கொடுக்கவும் முடியாது.

சாஸ்திரங்கள், கடவுளை அடையும் வழியை மட்டும் காட்டுகின்றன. ஒருமுறை உனக்கு வழி தெரிந்துவிட்டால், பிறகு சாஸ்திரங்களால் என்ன உபயோகம்? பிறகு தனிமையில் இருந்து, கடவுளின் நினைவில் தோய்ந்து ஆத்மாபிவிருத்தியைச் செய்து கொள்ளும் காலம் வருகிறது. ஒருவனுக்கு அவனுடைய ஊரில் இருந்து ஒரு கடிதம் வந்தது. அவனுடைய உறவினன் ஒருவன் தனக்குச் சில சாமான்களை வாங்கி அனுப்ப வேண்டும் என்று அந்தக் கடிதத்தில் எழுதியிருந்தான். கடைக்குப் போக இருந்த சமயத்தில், என்ன என்ன சாமான்களை வாங்க வேண்டும் என்பதை உறுதி செய்து கொள்வதற்காகக் கடிதத்தை அவன் பார்க்க நினைத்தான். ஆனால் அந்தக் கடிதம் தொலைந்து போய்விட்டது. நீண்ட நேரம் தேடிய பிறகு கடிதம் கிடைத்தது. அதை வெகு ஆவ லோடும் மகிழ்ச்சியோடும் எடுத்துப் பார்த்தபோது, ''ஐந்து கிலோ இனிப்புத் தின்பண்டத்தை யும், நாலு மாம்பழங்களையும், எட்டு வேஷ்டிகளையும் அனுப்பி வை'' என்று எழுதியிருந்தது. விஷயத்தைத் தெரிந்து கொண்டதும், அவன் அக்கடிதத்தைத் தூர வீசிவிட்டுத் தேவையான சாமான்களை வாங்கப் புறப்பட்டான். அப்படிப்பட்ட ஒரு கடிதத்திற்கு விஷயம் தெரியாமல் இருக்கும் வரையில்தானே ஒருவன் கவலைப்படுவான்? ஒரு தடவை விஷயம் தெரிந்து விட்டால், அடுத்துச் செய்ய வேண்டியது, சாமான்களை வாங்குவதற்குத் தேவையான காரியங்களில் ஈடுபடு வதுதான். அதேபோல, எல்லா சாஸ்திரங்களும் கடவுளிடம் போகும் வழியை, அதாவது ஆண்ட வனை சாட்சாத்கரிக்கும் வழியைத்தான் சொல்லுகின்றன. அவ்விதம் வழியைத் தெரிந்து கொண்டுவிட்ட நிலையில் அடுத்துச் செய்ய வேண்டிய ஒரே காரியம், முடிவான நிலையாகிய இலட்சியத்தை அடைவதற்காக முயற்சியில் ஈடுபடுவதுதான். கடவுளை சாட்சாத்கரித்து சுய அனுபவமாக உணர்ந்து கொள்வது ஒன்றுதான் வாழ்க்கையின் இலட்சியம்.



ஓம்



# விஜயதீபம்

## பணத்தின் மதிப்பு

### அவனது நிலை

செல்வத்தால் மதி மயங்கியவன் 'இதுவே உலகம், இதைவிடப் பெரிதாக வேறு எதுவுமே இல்லை' என்று நினைக்கிறான். அதன் காரண மாகக் கடவுள் சாட்சாத்காரம் என்னும் இலட்சியத்திலிருந்தே விலகி விடுகிறான். எத் தகைய இழப்பு இது! ஈடு செய்யக் கூடிய இழப்பா அது!

பொருளாசை காரணமாக ஆத்ம சாட் சாத்காரத்தை இழப்பவன், தற்கொலை செய்து கொள்பவனைப் போல தனக்குத்தானே மிகப் பெரிய கேட்டை விளைவித்துக் கொள் கிறான். ஆத்மாவைக் கொல்லும் அவன் வாழ்ந் தும் வாழாதவனே. பூமிக்குப் பாரமாக வாழ் பவனே ஆவான். அத்தகையவன் மீண்டும் மீண்டும் பிறவிகளுக்கும் பந்தங்களுக்கும் ஆளா கிறான். இந்த உண்மையை, உலகம் முழுமைக் கும் ஒரு பெரிய எச்சரிக்கை தருவது போல யமதர்மனின் வாய்மொழியாக கடஉபநிஷதம் முழுங்குகிறது:

> ''பரலோகவிஷயமும் ஆத்மஞானமும் அதில் கவனம் இல்லாதவனுக்கும், பண ஆசையால் மோகமடைந்து மதியிழந்து உள்ள அவிவேகிக்கும் விளங்காது. 'இதுவே லோகம், பரலோகம் என்று ஒன்றுமே கிடையாது' என்று நினைக்கும் அவன், மீண்டும் மீண்டும் மரணமாகிய எனது பிடியில் அகப்படுகிறான்.'' —2.6

மரணம் வாசல் கதவைத் தட்டிக்கொண்டே இருக்கிறது. ஆனால் மனிதனோ பண ஆசைக் குட்பட்டுக் குழந்தைத்தனமாக விளையாடிக் கொண்டிருக்கிறான். 'வாழ்வாவது மாயம், இது மண்ணாவது திண்ணம்'. என்றாலும் ஆண்ட வனின் முன்பு தன்னைச் சமர்பிக்க வேண்டிய மனிதன், பணத்தின் முன்பு தன்னைப் பலியாடு ஆக்கிக் கொள்கிறான்.

> ஒருபொழுதும் வாழ்வது அறியார் கருதுப
> கோடியும் அல்ல பல — குறள்

### நிலையாமை

நிலையாமையையே நிலைபேறுகக் கொண்டது உலகம். இதில் பணம், பட்டம், பதவி, இளமை, உறவினர், வாழ்க்கை என்று எது வாக இருந்தாலும் நிலைக்கப் போவதில்லை. ஒருநாள் இல்லாவிட்டால் ஒருநாள் அழியக் கூடியவைகளே. நிலையாமையைத் தவிர வேறு ஏதாவது இந்த உலகிலே நிலையானது இருக் கிறதா?

''மரணம் என்னும் மிகப் பெரிய ஓர் உண்மை இருக்கிறது. உலகம் முழுவதுமே மரணத்தை நோக்கிச் சென்று கொண்டிருக் கிறது. அனைத்தும் மடிகின்றன.

''நமது முன்னேற்றங்கள், வீண் பெருமை கள், சீர்திருத்தங்கள், போகப்பொருள்கள், செல்வம், அறிவு ஆகிய எல்லாமும் சாவு என்னும் ஒரே முடிவைப் பெறுகின்றன. அந்த ஒன்றே ஒன்றுதான் நிச்சயம். நகரங்கள் தோன்றி மறைகின்றன; பேரரசுகள் எழுந்து விழுகின்றன; கிரகங்களும் துண்டு துண்டாக உடைந்து பொடியாகி மற்றக் கிரகங்களைச் சூழும் வாயுக்களால் பறக்கடிக்கப்படுகின்றன. இப்படியேதான் ஆரம்ப காலத்திலிருந்து நடந்து வந்திருக்கிறது.

''மரணமே எதற்கும் எல்லாவற்றுக்கும் முடிவாகிறது. வாழ்வுக்கும், தாழ்வுக்கும், செல் வத்துக்கும், அதிகாரத்துக்கும், அறத்துக்கும்

முடிவு மரணமே. பாவிகளும் சாகிறார்கள்; மன்னர்களும் மடிகிறார்கள்; இரந்துண்டு வாழ்பவர்களும் மாள்கிறார்கள்; அனைவருமே எமனுக்கு இரை ஆகிறார்கள். அப்படியிருந்தும், வாழ்க்கையின் மீதுள்ள பெரும் பற்று மட்டும் ஒருவரையும் விடுவதில்லை. காரணம் சொல்ல முடியாதபடி, எப்படியோ நாம் வாழ்க்கையை விடாப்பிடியாகப் பற்றிக்கொண்டிருக்கிறோம். இதுவே மாயை'' என்று சுவாமி விவேகானந்தர் தமது 'மாயையும் மித்தையும்' என்ற சொற்பொழிவில் நிலையாமையை எடுத்துக் காட்டுகிறார்.

நிலையாமை பணத்துக்கும் பொருந்தும் என்பதை நாம் அறிவோம். ஆனால் உலகில் வாழ்க்கை நடைபெறுவதற்குப் பணத்தின் தேவையும் இருக்கவே செய்கிறது. இந்த நிலையில் நாம் என்ன செய்வது?

ரோஜா மலரையும் பறிக்க வேண்டும்; ஆனால் முள் கையிலே குத்தி விடவும் கூடாது—என்பது போலப் பணத்தை ஒதுக்க இயலாத நிலையில் நாம் கையாளவும் வேண்டும். அதே நேரத்தில் பந்தப்படாமலும் இருக்க வேண்டும். இது கடினம் என்பதில் சந்தேகம் இல்லை. ஆனால் நம்மால் அறவே இயலாதது என்பதும் இல்லை.

### அருட் செல்வம்

திருவள்ளுவர் 'அருளுடைமை' என்னும் அதிகாரத்தில் பொருள், அருள் ஆகிய இரண்டையும் இணைத்தே பேசுகிறார். ''பொருள் இல்லாதவர்களுக்கு இந்த உலகத்து வாழ்க்கை இல்லாததைப்போல, அருள் இல்லாதவர்களுக்கு மறுமையாகிய அந்த உலகத்து வாழ்க்கை இல்லை'', ''பொருள்களாகிய செல்வங்கள் இழிந்தவர்களிடமும் உள்ளன. அருளாகிய செல்வமே செல்வங்களில் தலைசிறந்த செல்வமாகும்.''

உலக வாழ்க்கைக்குப் பொருள் தேவையானதுதான். அதை மறுப்பதற்கில்லை என்பதும் உண்மையே. ஆனால் செல்வங்களிலேயே தலைசிறந்த செல்வமாக அருட்செல்வம் ஒன்றைத்தான் தெளிந்த அறிவு படைத்தவர்கள் அனைவருமே சுட்டிக் காட்டியிருக்கிறார்கள்.

அருட்செல்வத்தைப் பெறும் ஒரே ஒரு நோக்கத்தையே முன்னிட்டு மனித வாழ்க்கை அமைந்திருக்கிறது என்பதுதான் கடைந்தெடுத்த உண்மை. ஆகவே அருட்செல்வத்தை நாடுவதே ஒருவரின் தலையாய இலட்சியமும் கடமையும் ஆகிறது.

பந்தங்களால் அனுபூதிமான்களைப் பிணைக்க முடியவில்லை. தாமரையிலை நீர் போலவே பந்தங்களுக்குட்படாமல், பெரிய வாழ்க்கையை அவர்கள் வாழ்ந்து சாதித்திருக்கிறார்கள். அவர்கள் வாழ்ந்த முறை, பணத்தைப் பொருட்படுத்திய முறை—ஆகியவைகள் கடவுள் நாட்டம் கொண்ட அனைவருக்குமே மிகப் பெரிய படிப்பினைகளைத் தரக் கூடியது.

புதிதாக ஒரு ஊருக்குப் போக விரும்புகிறோம். அந்த ஊரிலே பார்க்க வேண்டிய இடங்களைப் பற்றி அந்த ஊரைப் பற்றிச் சொல்லும் புத்தகத்தைப் படித்துக் குறித்துக் கொள்கிறோம். அதுபோல, ஆண்டவனை அடைய விரும்புகிறவர்களும், அனுபூதிமான்கள் பொருட் செல்வத்தை எவ்விதம் பொருட்படுத்தியிருக்கிறார்கள் என்பதைக் கூர்ந்து கவனித்து உள்ளத்தில் குறித்துக் கொள்ள வேண்டும். அனுபூதிமான்களின் அடிச்சுவட்டிலே பொருட் செல்வத்தைக் கையாளும் போது, அவலநிலையில் இருந்து விடுபட்டு, அழியாத நிலைக்குச் செல்ல முடியும். ஆம், அது ஒன்றே நமக்கு வழி.

அனுபூதிமான்களின் வாழ்க்கையில் நடந்தது, எழுத்துக்கு எழுத்து அப்படியே நமது வாழ்க்கையிலும் நடக்கும், நடக்க வேண்டும் என்பது இல்லை. வாழ்க்கையில் எது நடந்தாலும், அதைப் போன்ற தருணங்களில் அனுபூதிமான்கள் எப்படி நடந்து கொண்டார்கள் என்பதை நாம் நினைக்க வேண்டும். அவர்களுடைய அந்த மனநிலையை நாம், நமது வாழ்க்கையிலும் நிலைநிறுத்த வேண்டும். அதாவது, அனுபூதிமான்களுக்கு எது இயல்பான மனநிலையோ அதை நமது வாழ்க்கையில், பாவனையாலும் பழக்கத்தாலும் முயற்சி செய்து உறுதிபடுத்த வேண்டும். எறும்பூர கல்லும் தேயுமல்லவா?

ஒரு சூழ்நிலை பிரச்னையாக எழும்போது 'ஓர் அனுபூதிமான் இப்படிப்பட்ட சமயத்தில் எப்படி நடந்து கொண்டிருப்பார்?' என்று சிந்தித்து, அந்த அனுபூதிமானின் மனநிலையில் நம்மை வைத்து அதன்படி செயல்பட முயற்சி செய்ய வேண்டும்.

எடுத்த எடுப்பிலேயே, நினைப்பதாலேயே, நாம் அனுபூதிமான்களைப் போல முழு அளவில் நடந்து கொள்ள முடியாது என்பது உண்மை தான். ஆனால் முயற்சியாவது செய்யலாம் அல்லவா? அதற்கு எது தடை? அவ்விதம் முயற்சி செய்வதன் மூலம் ஓர் ஆத்ம திருப்தி யையாவது நாம் பெறுவோம்.

கீதாசாரியனும் நமக்கு ஆறுதல் சொல் வதைப் போல, பின்வருமாறு குறிப்பிடுகிறார்.

'இதில் முயற்சி வீணுதல் இல்லை. எதிரிடை யான பலன் உண்டாகாது. இந்த தர்மத்தை ஒரு சிறிது அனுஷ்டித்தாலும் கூட பெரிய பயத்திலிருந்தும் காப்பாற்றும்'. (2–40)

'பார்த்தா! அவனுக்கு அழிவு இம்மையிலும் இல்லை, மறுமையிலும் இல்லை. மகனே! நிச்சய மாக நல்லதைச் செய்பவன் ஒருபோதும் தீய நிலையை அடையவே மாட்டான்.' (6–40)

'விடாமுயற்சியுடன் அப்பியசிக்கும் யோகி யானவன், பாவம் தேய்ந்து பரிசுத்தனாய்ப் பல பிறவிகளில் படிப்படியாகச் சித்தி பெற்று, பிறகு எல்லாவற்றையும் விட உயர்ந்த கதியை அடைகிறான்'. (6–45)

பணம் ஒரு உபாதி. இரண்டொரு நாட் களுக்கு மட்டுமே நமது கைவசத்தில் இருந்து விட்டுப் போகப் போகிறது. 'மண்ணில் நிலை யில யாக்கைகள்' என்று நம்மாழ்வார் அருளிச் செய்தார். அதைவிடவும் நிலையில்லாதது பணம். ஆகவே பணமே வாழ்க்கை அல்ல. ஆண்ட வனைச் சாட்சாத்கரிப்பதற்காக மட்டுமே, ஆண்டவனால் அருள்கூர்ந்து இந்த மனிதப் பிறவி கொடுக்கப்பட்டிருக்கிறது. உடல் வாழ்க்கை என்னும் பயணத்துக்குப் பணம் தேவை என்பது உண்மைதான். ஆனால் அந்தப் பணம், நமது உயர் வாழ்க்கையாகிய உயிர் வாழ்க்கையைப் பலியிட்டுவிடுவதாக எந்த நிலை யிலும் அமையக்கூடாது—இந்த உண்மையை உள்ளத்தில் ஆழமாகப் பதிய வைத்து ஆத்ம சாதனங்களை முறையாகப் பழகும்போது, பணத்தின் காரணமாக விளையும் தீமைகளில் இருந்து தப்ப முடியும்.

'பணம் பாதாளம் வரையிலும் பாயும்' என்று கவித்துவத்துடன் சொல்லியிருக்கிறார் கள். அவ்விதம் அவ்வளவு ஆற்றல் கொண்ட பணம், சாதகன் ஒருவன் எச்சரிக்கையாக இல்லாவிட்டால், அவனது ஆன்மாவையே உறிஞ்சிவிடும்.

'உண்மைக்காக எதையும் துறக்கலாம். ஆனால் எதற்காகவும் உண்மையைத் துறந்து விடக்கூடாது' என்று சுவாமி விவேகானந்தர் குறிப்பிட்டார். ஒருவன் தனது ஆன்மீக முன் னேற்றத்துக்காகப் பொருட்செல்வத்தை இழப் பதாக இருந்தால், உண்மையில் அவன் இழப் பது ஒன்றுமே இல்லை. மாறாக அவன் பெற்றது தான் சூட்சுமமாகவும், அவனது ஆன்மாவைக் காப்பாற்றக் கூடியதாகவும், விலை மதிப்பற்ற தாகவும் இருக்கும். புத்தர், பட்டினத்தார் இன்னும் இவர்கள் வரிசையில் உள்ள மிகப் பெரும்பாலானவர்கள் இழந்தது ஒன்றுமே இல்லை. அவர்கள் பெற்றதுதான் இப்போதும் அவர்களைப் பற்றி நம்மை பேச வைக்கிறது. அவர்களைச் வழிபடச் செய்கிறது.

பணத்தின் மீதுள்ள பேராசை காரணமாக பொருந்தாத வாழ்க்கையை மேற்கொள்பவர் கள், கடவுளிடம் இருந்து மிக மிக விலகிப் போவார்கள் என்பது நிச்சயத்திலும் நிச்சயம். அவர்கள் பணத்தைச் சேர்ப்பதாக ஸ்தூலமா கத் தோன்றினாலும், உண்மையில் அவர்கள் சேர்த்தது ஒன்றுமே இல்லை.

விலைமதிப்பற்ற ஆன்மீக முன்னேற்றத்துக் காக உடல், பொருள், ஆவி என்று தம்மிடம் உள்ள எல்லாவற்றையும், (உள்ளும் புறமும், அல்லது உள்ளத்தளவில் மட்டுமாகிலும்) முழு அளவில் துறந்துவிட தயாராக இருந்தவர்களே தெய்வமாக ஆகியிருக்கிறார்கள். பிறரையும் தெய்வீக நிலைக்கு உயர்த்தி இருக்கிறார்கள்.

ஆகவே, வாழ்க்கையில் வெற்றி பெறுவது என்பது அணு பைசாக்களில் அடங்கியிருக்க வில்லை. கடவுள் நிலையைப் பெறுவதில் மட்டுமே அடங்கியிருக்கிறது.



சுகத்திலிருந்துதான் வேதனை பிறக்கிறது. சுகத்திலிருந்துதான் பயம் பிறக்கிறது. சுகத் திலிருந்து விடுபட்டவன் வேதனையையோ பயத்தையோ அறியான்.

—புத்தர்

# பிரம்மசரியம்

**சுவாமி பிரம்மானந்தர்**

ஆத்ம சாதனைகளில், எல்லாருக்கும் ஒரே வகையான விதியை ஏற்படுத்த முடியாது. சாதகர்களுக்கு வழிகாட்டும் பொருட்டு எத் தகைய உபதேசத்தையும் செய்வதற்கு முன்பு, அவர்கள் ஒவ்வொருவருடைய மனப் போக்கும் எப்படிப்பட்டது என்பதை நாம் கண்டறிய வேண்டும்.

ஒருவனுடைய குறிப்பிட்ட ஒரு மனப்போக் கின் இயல்புக்கு மாறுக அமையக்கூடிய வகை யில் உபதேசம் செய்யப்படுமானல், அது



சுவாமி பிரம்மானந்தர்

அவனுக்கு நன்மையைத் தராமல் போவது மட்டும் இல்லாமல், பலவித கெடுதல்களையும் விளைவித்து விடக்கூடும்.

ஆகவே, குருவானவர் தமது சிஷ்யர்களில் ஒவ்வொருவருடைய மனப்போக்கும், பிரத்தி யேகமான இயல்பும் எப்படிப்பட்டது என் பதை நெருங்கிப் பழகி நேரில் தெரிந்து கொள்ள வேண்டுவது முற்றிலும் அவசியம். அவரவர்களுடைய மனப்பான்மைக்கு ஒத்து, எளிதில் உடனே ஏற்றுக்கொள்ளக்கூடிய வகை யில் உபதேசங்களைச் செய்ய வேண்டும்.

இரண்டொரு பொது விதிகள் நீங்கலாக 'இந்த மார்க்கத்தையே நீ பின்பற்ற வேண் டும்' என்று குறிப்பிட்ட ஏதோ ஒரு சாதகருக் குரிய வழியை மற்றவர்களின் முன்னிலையில் அவருக்குச் சொல்லக் கூடாது. ஸ்ரீராமகிருஷ் ணர் எப்படி ஒவ்வொரு சிஷ்யரையும் தனித் தனியாக அழைத்துச் சென்று, அந்தரங்கமாக அவரவருக்குரிய பிரத்யேக தேவையான உபதே சத்தைச் செய்தார் என்பதை நான் பார்த் திருக்கிறேன்.

உங்களுடைய ஆத்ம சாதனை சம்பந்தமான எந்த விஷயத்தைப் பற்றியாவது நீங்கள் உங் கள் குருவைக் கேட்க விரும்பினல், அதை அவ ரிடம் தனிமையில் அந்தரங்கமாகக் கேட்டுக் கொள்ள வேண்டும்.

பொதுவாக, ஞான சாதனைகளில் ஈடுபடும் எல்லாச் சாதகர்களுக்கும் நன்மை தரக்கூடிய ஒரு சில விதிகள் வருமாறு: முதலாவதாக, நீங்கள் கடவுளிடம் உறுதியான நம்பிக்கை கொண்டவர்களாக இருக்க வேண்டும். கடவுளை அறிந்து அவருடைய கிருபையைப் பெற்றுல், உங்கள் வாழ்க்கையின் எல்லாவித மான சிக்கல்களும் தீர்க்கப்பட்டுவிடும் என்றும், நீங்கள் இந்தப் பிறவி எடுத்ததன் நோக்க மானது நிறைவேறிவிடும் என்றும், நித்தியா னந்தமாகிய அம்ருதத்தைப் பருகி அழியாத் தன்மையை நீங்கள் அடைந்து விடுவீர்கள் என்றும் பரிபூரணமாக நம்பியிருக்க வேண்டும்.

அடுத்தபடியாக பிரம்மசரியம். வழுவாத பிரம்மசரியம் இல்லாமல், உயர்ந்த இலட்சி யங்களில் யாருக்கும் உறுதிப்பாடு இருக்க முடி யாது. உடல், மனம், புத்தி ஆகியவைகளின் வளர்ச்சியையும் சக்தியையும் முழு அளவில் பெறுவதற்குப் பிரம்மசரியம் முற்றிலும் அவ சியம்.

பிரம்மசரிய விரதத்தைக் கண்டிப்பாக அனுஷ்டித்து வருபவர்களிடம் அபாரமான ஞாபக சக்தியும் ஆச்சரியமான புத்தி கூர்மை யும் உண்டாகின்றன. பிரம்மசரியத்தால் புதிய ஒரு நாடி ஏற்படுகிறது; அதன் வலிமையால்

தான் இத்தகைய சக்திகள் எல்லாம் உண்டா கின்றன.

நமது பெரிய ஆசார்யர்கள் அனைவரும், பிரம்மசரியத்தைப் பற்றி அவ்வளவு அதிகமாக ஏன் வற்புறுத்தியிருக்கிறார்கள் என்பது உங் களுக்குத் தெரியுமா? இதில் ஒருவன் வீழ்ச்சி அடைந்தால் அவன் எல்லாம் இழந்து விடு கிறான் என்பதை அவர்கள் அறிந்திருந்ததால் தான்.

உண்மையான பிரம்மசாரி தன் சக்தியை (vitality) இழப்பதில்லை. அவன் பார்ப்பதற்கு ஒரு பயில்வானைப் போல இல்லாமல் இருக்க லாம். ஆனால் அவனுடைய புத்தியானது சாதாரண அறிவுக்கு எட்டாத, புலன்களைக் கடந்த ஆன்மீக விஷயங்களையும் அறிய வல்ல அபூர்வ சக்தியோடு கூடிய கூர்மையைப் பெறு கிறது.

ஒரு பிரம்மசாரி அவசியம் அனுஷ்டிக்க வேண்டிய நியமங்கள் உண்டு. பரபரப்பையும் காமத்தையும் உண்டாக்கும் உணவு, மிதமிஞ் சிய தூக்கம், அளவு கடந்த உழைப்பு, சோம் பல், கெட்டவர்களின் சேர்க்கை, கேடான உரையாடல் ஆகிய இவைகளை அவன் தவிர்க்க வேண்டும். வீண் பேச்சில் ஈடுபடுவீர்களானால், உங்கள் மூளை கொதிப்படையும். உங்கள் சிந் தனைகளை நீங்கள் அடக்க முடியாது; தூக்கம் இல்லாமை போன்ற பல தொந்தரவுகளுக்கு ஆளாகித் துன்பப்படுவீர்கள்.

நாக்கைக் கட்டுப்படுத்துவதும் அவசியம். இல்லாவிட்டால் பல தொந்தரவுகளுக்கு நீங் கள் ஆளாக நேரிடும். ஸ்ரீராமகிருஷ்ணர் 'உங் கள் பூடி (வயிறு)யையும், மூடி (மூளை)யையும் குளிர்ச்சியாக வைத்திருங்கள்' என்று சொல் வது வழக்கம். அதாவது அதனுடைய பொருள், உங்கள் வயிறும் மூளையும் குளிர்ச்சியாகவும் சாந்தமாகவும் இருந்தால்தான், நீங்கள் சரி யான வகையில் நன்றாகச் சாதனம் செய்ய முடியும் என்பதாகும்.

நாக்கை அடக்க முடியாத பெருந்தீனிக் காரன், தனது உடலுக்கும் மனதுக்கும் அழி வையே தேடிக் கொள்கிறான்.

வெங்காயம், வெள்ளைப் பூண்டு, மிளகாய் முதலிய இவை போன்ற உணவுப் பொருள் களை ஒருவன் அதிகமாகத் தின்றால் உடம்பில் பதற்றம் உண்டாகும். அவனுக்கு மனதை அடக்குவது மிகவும் கஷ்டமாகிவிடும். ஆன்மீக வாழ்க்கையை அனுஷ்டிக்க விரும்புபவர்கள், தாங்கள் உண்ணும் உணவுப் பொருள்கள் எப்படிப்பட்டவை என்பதை விசேஷ கவனத் துடன் ஆராய்ந்து பார்ப்பது அவசியம் என்று நான் நம்புகிறேன். சத்துள்ளதாகவும் சுலப மாக ஜீரணமாகக் கூடியதாகவும் உள்ள உணவை மட்டுமே உட்கொள்ள வேண்டும். வயிற்றுக்குள் அளவுக்கு மீறிய உணவைத் திணிப்பதில் ஒரு நன்மையும் இல்லை.

உணவு விஷயத்தில் கண்டிப்பான விதி ஒன் றையும் ஏற்படுத்த முடியாது. சிலருக்கு மிக நன்றாக ஒத்துக்கொள்ளக் கூடியதாக இருக்கும் உணவு, மற்றும் சிலருக்குத் தீமையை விளை விக்கக்கூடும். ஒவ்வொருவரும் அவரவருக்கு ஒத்துக்கொள்ளக் கூடிய உணவு இன்னதுதான் என்பதைத் தங்கள் தங்கள் அனுபவத்தைக் கொண்டே அறிந்துகொள்ள வேண்டும்.

நமது உடல் தகுந்த நிலையில் இருந்து, நாம் நம்முடைய நிஜ சொரூபத்தை (தெய்வீகத்தை) அறிய வல்லவர்கள் ஆகவேண்டும் என்பதன் பொருட்டே, நாம் உணவை உட்கொள்ள வேண்டும்.

'சரீரமாத்யம் கலு தர்ம ஸாதனம்' என்று சாஸ்திரங்கள் கூறுகின்றன. அதாவது, ஞான சாதனைக்கு உடல் நலம் பிரதானமாகும் என் பது பொருள். இதனால், ஒருவன் இரவும் பக லும் தன்னுடைய உடம்பையே நினைத்துக் கொண்டு உட்கார்ந்திருக்க வேண்டும் என்பது அர்த்தம் இல்லை. இதன் கருத்து, உடலின் சக்திக்கு (vitality) கேடு உண்டாகாத வகை யில் பார்த்துக்கொள்ள வேண்டும் என்பது தான். உடம்பில் கொதிப்பையோ அல்லது சோம்பலையோ உண்டாக்கக் கூடிய பொருள் களை நீக்கி, நல்ல புஷ்டியைத் தரக்கூடிய உணவை மட்டும் ஒருவன் சாப்பிட வேண்டும்.

ஸ்ரீராமகிருஷ்ணர் 'பகலில் உனக்கு விருப்ப மான அளவுக்கு நீ சாப்பிடலாம். ஆனால் இரவில் மிகவும் குறைவாகவே சாப்பிட வேண் டும்' என்று சொல்வது வழக்கம். இதன் கருத்து, இரவில் நீங்கள் குறைவாக உட் கொண்டால் உடல் லேசாக இருக்கும்; மன தைச் சுலபமாகக் கட்டுப்படுத்தி தியானத் தில் நிலைத்து நிற்கச் செய்யலாம் என்பதுதான்.

இல்லாவிட்டால், தூங்கிவிடவோ அல்லது சோம்பலில் காலம் கழிக்கவோ உங்களுக்குத் தோன்றும். உங்களுடைய விருப்பம் இரவைத் தூக்கத்தில் கழிப்பதா, அல்லது தியானத்தில் செலவழிப்பதா? பகல் பொழுதில் மனதை ஈர்த்துச் செல்வதற்கு வழிகளாக பலவிதமான முகாந்திரங்கள் இருக்கின்றன. ஆகவே, அது தியானத்துக்கு ஏற்றதல்ல. ஆனால் இரவு நேரத்திலோ எல்லா ஜீவராசிகளும் உறங்கி விடுகின்றன; இயற்கையே நிசப்தமாகவும் சாந்தமாகவும் இருக்கிறது. இந்த நேரம்தான் சாதகர்கள் கடவுளைத் தியானிப்பதற்கு மிகவும் பொருத்தமான காலம். நடு இரவின்போது மனம் சுலபமாக ஒன்றுபட்டு தியானத்தில் ஆழ்ந்து விடுகிறது.

ஆத்ம சாதனைகளைப் பழகும்போது, பிற ருக்குக் காட்டிக் கொள்ளும் நோக்கத்தோடாவது, அல்லது எல்லோரும் பார்க்கக் கூடிய வகையில் வெளிப்படையாகவோ செய்யக் கூடாது. மற்றவர்கள் முன்னிலையில் அவை களைச் செய்தால் அவர்களால் கெடுதல் உண்டாகும். மக்கள் பரிகாசம் (mock) செய்வார் கள்; வலுவிலே உங்களுக்குப் புத்தி சொல்ல வருவார்கள்; ஒன்றுக்கொன்று முரணான பல யோசனைகளையும் சொல்வார்கள். இதன் காரணமாக உங்கள் உள்ளத்தில் பல சந்தே கங்கள் எழுந்து, உங்கள் ஆன்மீக முன்னேற்ற மானது தடைப்பட்டு நின்றுவிடும். மேலான ஒரு சாதகன் எப்படி நடந்து கொள்வான்? அவன் இரவில் கொசுவலையை இழுத்து விட்டுக் கொண்டு படுத்துக் கொள்கிறான். அவன் தூங்குகிறான் என்றே ஒவ்வொருவரும் நினைக் கிறார்கள். ஆனால் உண்மை என்னவென்றால், அவன் இரவு முழுவதும் அமைதியாகப் படுக்கை யில் படுத்தபடியே, தியானத்திலேயே பொழு தைக் கழிக்கிறான்.

நீங்கள் இளைஞராக இருக்கும்போதே, தெய்வீக இன்பத்தின் ருசியைப் பெறும் பொருட்டு மிகுதியாகப் பாடுபட்டு முயற்சி செய்ய வேண்டும். ஒரே ஒருமுறை அதன் சுவையை நீங்கள் பெற்று விடுவீர்களானால், உங்கள் ஞான சாதனையை நீங்கள் ஒருக்காலும் கைவிட மாட்டீர்கள். உயிர் போகக்கூடிய ஆபத்து வந்தாலும் உங்கள் ஆத்ம சாதனைகளை விடாமல் செய்து வருவீர்கள்.

இரவில் தூக்கத்தால் அதிகமாகத் தொந் தரவு அடையக் கூடியவர்கள், இரவை தியா னத்தில் கழிக்கும் நோக்கத்துடன், அதன் பொருட்டுப் பகல் வேளையில் கொஞ்சம் தூங்கு வது நல்லது. விடியற்காலை, மாலை வேளை, நடு இரவு ஆகியவைகள் தியானத்துக்கு உரிய மிகச் சிறந்த நேரங்கள் ஆகும். மக்கள் பெரும் பாலும் இந்த அரிய நேரத்தை உபயோகமற்ற வழிகளிலேயே செலவழித்து விடுகிறார்கள்.

ஸ்ரீராமகிருஷ்ணர் ஒருபோதும் இரவைத் தூக்கத்தில் கழித்ததில்லை. அவர் தம்மோடு இருக்கும் இளைஞர்களாகிய சீடர்களையும் அதிக நேரம் தூங்க விடுவதில்லை. மற்றவர்கள் அனை வரும் தூங்கிவிட்ட பிறகு, அவர் தம் சீடர் களை எழுப்பி விடுவார்; அவர்களுக்குக் குறிப் பிட்ட சாதனை முறைகளை உபதேசித்துப் பஞ்ச வடிக்கோ, தேவியின் சன்னதிக்கோ அல்லது சிவன் கோயிலுக்கோ அனுப்பி தியானம் செய் யும்படி ஏவுவார். அவர் சொன்னபடியே சீடர் கள் இரவு முழுவதையும் தியானத்தில் கழித்து விட்டுப் பகலில் படுத்துக்கொள்வார்கள். இப்படித்தான் ஸ்ரீராமகிருஷ்ணர் தமது சீடர் களைப் பலவகையான ஞான சாதனைகளில் பயிலுவித்து வந்தார்.

அவர் அடிக்கடி தமது சீடர்களிடம் பின் வருமாறு சொல்வது வழக்கம்; ''**யோகிகள், போகிகள்** (உலக போகங்களில் நாட்டம் உடைய வர்கள்), **ரோகிகள்** (நோயாளிகள்) ஆகிய மூன்று வகையான மக்கள் இரவில் கண் விழித் திருப்பார்கள். நீங்களெல்லாம் யோகிகள். இரவுப் பொழுதை நீங்கள் ஒருக்காலும் எந்தக் காரணத்தை முன்னிட்டும் தூக்கத்தில் கழித்துவிடக் கூடாது.''



ஷேக்ஸ்பியருக்கு எந்த ஆசிரியர் கற்பித்தார்? பிராங்க்ளின், பேகன், வாஷிங்டன், நியூட்டன் முதலியவர்களுக்கு எந்த ஆசிரியர் கற்பித்தார்? யாருமில்லை. அதைப்போலத்தான் உனக்கு நீயே ஆசிரியனாக இருக்க வேண்டும்.

—எமர்ஸன்

# ஸ்ரீ ராமகிருஷ்ணருடன் எனது அனுபவங்கள்

பவதாரிணி

தமிழாக்கம்: திருமதி கோகிலா காளஹஸ்தி

### 1. முன்னுரை

இந்தக் கட்டுரையைப் படிப்பதற்கு முன்னுல் பவதாரிணியைப் பற்றி முன்னுரையாகச் சில கருத்துக்களைத் தெரிந்து கொள்ளலாம்.

பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ணரின் நேர் சீடர்களிலே கடைசியாக நம்மிடையே வாழ்ந்த ஒரே சிஷ்யை பவதாரிணி. அவருடைய இந்தக் கட்டுரை, உண்மையாகவே உள்ளத்தைத் தொடும் தன்மையும் அசாதாரணமான ஆன்மீக அனுபவத்தைக் காட்டுவதாகவும் அமைந்திருக்கிறது.

தனக்கு வயது எட்டு நடந்து கொண்டிருந்த போது, முதன் முதலாக பவதாரிணி ஸ்ரீ ராம கிருஷ்ண தேவரைச் சந்தித்திருக்கிருர். ஆனுல் இந்தச் சந்திப்பும், அடுத்தடுத்து ஏற்பட்ட ஒரு சில சந்திப்புகளும் இவருடைய முழு வாழ்க்கையையும் மாற்றியமைத்து விட்டன.

பவதாரிணியின் தாயார் ஸ்ரீ ராமகிருஷ்ணரின் உறவினள். ஸ்ரீகுருதேவரேதான், தமது பாமர சீடர்களில் ஒருவருக்கு பவதாரிணியை மணம் முடிக்க ஏற்பாடு செய்தார். அந்தச் சீடர் ஸ்ரீகுருதேவருக்கு உறவினரான உபேந்திரநாத் முகர்ஜி என்பவராவார்.

உபேந்திரநாத் மிகவும் ஏழை. ஸ்ரீ ராம கிருஷ்ணரின் அருளால், தான் பெரும் பொருள் திரட்ட முடியும் என்று அவர் உறுதியாக நம்பினுர். அப்படியே செல்வம் படைத்த ஒரு பெரிய மிராசுதாரர் ஆனுர். இந்த உபேந்திரநாத் முகர்ஜியின் அச்சுக்கூடத்தில்தான், லாட்டு மகராஜ் பல மாதங்கள் உறங்கியிருக்கிருர். உபேந்திரர் 1915-ல் இறந்து விட்டார்.

பவதாரிணி தமது கணவர் மறைந்த பிறகு, ஓர் இந்து சன்னியாசினிக்குரிய வாழ்க்கையைக் கடைப்பிடித்தார். தள்ளாத முதிய வயதிலும் அசாதாரணமான மிகக் கடினமான கட்டுப்பாடுகளுடன் வாழ்க்கை நடத்தினுர். அவருடைய உணவு பாலும் பழமும்தான். அவைகளையும் பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ணருக்கு நிவேதனமாகப் படைத்து, அவரைப் பூஜித்த பிறகு இரவு நேரத்தில் உட்கொள்ளுவார். அவருடைய ஒரே மகனும் பேரனும் முன்பே காலமாகிவிட்டார்கள்.

பவதாரிணிக்கு 1955-ஆம் ஆண்டில் 83 வயது நடந்து கொண்டிருந்தது. அப்போது அவர் ஸ்ரீ ராமகிருஷ்ண மிஷன் பணியாற்றி வரும் கிளைகளுக்கு க்ஷேத்ராடனம் செய்தார். அந்தப் புனிதப் பயணத்தின்போது அவர், இரண்டு மூன்று நாட்கள் பெங்களூர் ஸ்ரீ ராம கிருஷ்ண ஆசிரமத்தில் தங்கியிருந்தார். அப்போது ஆசிரமத்தைச் சேர்ந்த சாதுக்கள் கேட்டுக்கொண்டதற்கிணங்க, ஸ்ரீ ராமகிருஷ்ணருடன் பழகிய நாட்களை நினைவு கூர்ந்து அவர் கூறினுர். பெங்களூர் ஆசிரமத்தில் பதிவு செய்யப்பட்ட அதுவே இந்த இதழில் இங்கு கட்டுரையாகத் தரப்படுகிறது.

பெங்களூர் ஸ்ரீ ராமகிருஷ்ண ஆசிரமத்தில் 1955 ஆம் ஆண்டு ஜூலை மாதம் 26 ஆம் தேதி, மாலை வழிபாட்டிற்குப் பிறகு பவதாரிணி அம்மையார் வங்க மொழியில் கூறினுர். அப்போது அங்கு ஆசிரமத்தின் தலைவராக இருந்த ஸ்ரீமத் சுவாமி யதிஸ்வரானந்தஜி மகராஜ் அவர்கள், குழுமி இருந்த அன்பர்களுக்காக வங்க மொழியில் இருந்து ஆங்கிலத்தில் மொழி பெயர்த்துக் கூறினுர்.

### 2. பவதாரிணி சொல்கிருர்

அப்போது எனக்கு எட்டு வயது நடந்து கொண்டிருந்தது. தாகூர் (ஸ்ரீராமகிருஷ்ணர்) எங்கள் வீட்டிற்குச் சாப்பிட வந்தார். குறும்புத்தனமுடைய நான் அங்கும் இங்குமாகச் சுற்றி விளையாடிக்கொண்டிருந்தேன். எனது தாயார் பணியாளிடம் என்னைக் கூப்பிடும்படி சொன்னுர்.

தாகூர் என் பெயரைக் கேட்டார். ''ஹிபி'' (நிதானமாகப் பேசுபவள். பேச்சுக் கற்றுக் கொள்ள நீண்டகாலம் எடுத்துக் கொண்டவள் என்பது பொருள்) என்று என் தாயார் அவரிடம் சொன்னுர். தாகூர் அதை மாற்ற விரும்பினுர். பெண் குழந்தைக்கு ஒரு மலரின் பெயர் வைப்பதுதான் அக்கால வழக்கம். ஆனுல், அவர் என்னை **பவதாரிணி** என்று அழைத்தார். தட்சிணேஸ்வரத்தில் கோயில் கொண்

டுள்ள லோகமாதாவின் பெயரை வைத்துப் பவதாரிணி என்று அழைத்தார்.

மறுபடியும் ஒருசமயம் தாகூர் எங்கள் வீட்டிற்குச் சாப்பிட வந்தார். அப்போது எனக்கு



எட்டு வயது. அவர் வந்தபோது எனக்கு என்ன வயது என்று என் தாயாரிடம் கேட்டார். என்னுடைய தாயார் 'எட்டு வயது' என்று பதில் சொன்னார். 'உன் மகளுக்கு எட்டு வயதாகி விட்டது. அவளைக் கட்டாயம் திருமணம்*செய்து கொடுக்க வேண்டும். அவளுக்கேற்ற ஒரு வரனிருக்கிறான்' என்றார். (அதாவது திருமணத்திற்கு நிச்சயம் செய்து விடலாம் என்றார்.)

எனது தாயாரும் ஒப்புக்கொண்டார். பிறகு யார் அந்தப் பையன் என்று என்னுடைய தாயார் விசாரித்தார். தாகூர், ''அந்த வரனுக்குச் சிறிதும் படிப்பில்லை'' என்று சொன்னார். ''அப்படியென்றால் அது மிகவும் நல்ல வரன்'' என்று என் தாய் சொன்னார். நான் லட்சுமியானதால் (செல்வத்திற்குரிய தெய்வம் லட்சுமி—லோகமாதாவின் ஒரு அம்சம்) வாழ்க்கையில் பிற்காலத்தில் நல்ல அதிருஷ்டமே கிடைக்கும் என்று கூறி எப்படியோ அந்த வரனையே நிச்சயம் செய்யும்படி வற்புறுத்தினார்.

ஒருநாள் உபேந்திரருடைய தாயார் தாகூரைத் தரிசிக்க தட்சிணேசுவரம் சென்றார். தாகூர் அந்த அம்மாளிடம் 'உன் மகன் இந்தப் பெண்ணைக் கட்டாயம் திருமணம் செய்து கொள்ள வேண்டும்' என்றார். அந்த அம்மையாரும் ஒப்புக்கொண்டார்.

நரேன் (சுவாமி விவேகானந்தர்) அந்தச் சமயத்தில் அங்கு இருந்தார். நரேன் 'திருமணம் செய்து கொள்ளப் போவது யார்?' என்று கேட்டார். தாகூர் விஷயத்தைச் சொன்னார். அதைக் கேட்ட நரேன் எதிர்ப்புத் தெரிவித்தார். ஏனென்றால் நான் அழகாயில்லை; கறுத்த மேனியுடையவள். ஆதலால் உபேந்திரருக்கு வேறொரு பெண்ணைத் தேர்ந்தெடுக்கும்படி நரேன், தாகூரிடம் சொன்னார்.

தாகூர், நான் அதிருஷ்டசாலி என்றும், உபேந்திரர் என்னை ஏற்க வேண்டும் என்றும், பிறகு அவர் பணக்காரர் ஆவார் என்றும் சொல்லி இந்தத் திருமணத்திற்கு வற்புறுத்தினார். உபேந்திரருடைய தாயார், தாகூரின் யோசனையை ஏற்றுக்கொண்டார். அந்த அம்மையாரும் அவரது கணவரும், தட்சிணேஸ்வரத்தில் தாகூருடன் இருக்கும் தங்கள் மகன் வீடு திரும்புவானென்றும், தங்களுக்கு ஒரு மருமகள் வரப் போகிறாள் என்றும் எண்ணி மகிழ்ச்சி அடைந்திருந்தார்கள்.

திருமணத்திற்குப் பிறகு நரேன் எங்கள் வீட்டிற்கு வருவது வழக்கம். திருமணம் நிச்சயமாகிக் கொண்டிருந்த சமயத்தில் நரேன்மீது எனக்கு மிகவும் கோபம். ஏனென்றால், நான் கறுப்பாக இருக்கிறேன் என்று நரேன் சொல்லியிருந்ததை நான் கேள்விப்பட்டிருந்தேன். ஆகவே, நரேன் எங்கள் வீட்டிற்கு வரும் சமயங்களில் நான் அவரை உபசரிக்கமாட்டேன். சாப்பிடுவதற்குப் பருப்பு முதலிய எதையும் நரேனுக்குக் கொண்டுபோய் கொடுக்கமாட்டேன். நான் அவரிடம் பாராமுகமாக வெறுப்புடன் நடந்து கொண்டதற்குக் காரணம், அவர் என்னைப் பற்றிச் சொன்னதும் திருமணத்திற்குத் தடையாக இருந்ததுதான் என்பதை என் தாயார் நரேனிடம் தெரிவித்தார். அதைக் கேட்ட நரேன், அப்போது முதல் மிகவும் அன்பாக நடந்து என்னைச் சமாதானப்படுத்தினார்.

'நான் தகப்பனார் வீட்டிலிருக்கும்போது வீட்டுக்குள்ளேயே வைக்கப்பட்டு நன்றாக உணவளிக்கப்பட வேண்டும்; அப்போதுதான் என் நிறம் வெண்மையாகும், என்று நரேன் தெரிவித்தார். ஆனால் என்னுடைய சிறு தோழிகள் வருவார்கள். என்னைக் கூப்பிடுவார்கள். ஆகவே அவர்களோடு விளையாடுவதற்காக உணவிற்குப் பிறகு எல்லோரும் மதியம் ஓய்வு எடுத்துக் கொண்டிருக்கும்போது வீட்டிலிருந்து நழுவி விடுவேன். அவர்களின் ஓய்வு நேரம் முடிவதற்கு

*அந்நாளில் பாலியத் திருமணம் வழக்கத்தில் இருந்தது.

முன்பு வந்து விடுவேன். எப்படியோ ஒருநாள் நான் தாமதித்து வந்துவிட்டேன். அனைவரும் எழுந்து விட்டிருந்தார்கள். எனக்கு என்ன செய்வதென்றே தெரியவில்லை. அந்தச் சமயத்தில் தாகூர் வந்து கூடத்தில் உட்கார்ந்திருப்பதைக் கண்டேன். நான் எனக்குள் நினைத்துக் கொண்டேன்: ''நான் அவர் அருகில் அமர்ந்தால், அம்மா ஒன்றையும் கவனிக்க மாட்டாள். நான் தாகூருடன்தான் இருந்து கொண்டிருந்தேன் என்று நினைத்துக்கொள்வாள்.''

நான் நகம் கடித்துக் கொண்டிருப்பதைத் தாகூர் பார்த்தார். அதை நிறுத்தும்படி கூறினார். பிறகு அவர், 'என்னைப்பற்றி நீ என்ன நினைக்கிறாய்? நான் கடவுள்தான் என்று சிலர் சொல்லுகிறார்கள். அதைப்பற்றி உன்னுடைய கருத்து என்ன?' என்று கேட்டார். நான், 'இல்லை, இல்லை, இல்லை. நீங்கள் கடவுள் இல்லை. நீங்கள் என் கணவருடைய குரு, குரு' என்றேன்.

பிறகு திடீரென்று ஒரு நறுமணம் கமழ்வதை உணர்ந்தேன். தெய்வங்களை வழிபடும் போது உபயோகிக்கும் ஒரு சாந்தின் மணம் அது. கடவுளேதான் தாகூராக வந்திருக்கிறார் என்று சிலரால் சொல்லப்படுவதால் இந்த நறுமணம் அவரிடமிருந்துதான் வருகிறதுபோலும் என்று நான் நினைத்தேன். நான் அவருக்கு மிகவும் அருகில் இருக்கும்போது திடீரென்று தாகூரின் உருவம் உதயசூரியனுடைய வண்ணப் பேரொளியில் மறைந்தது. அப்போது அவருடைய உருவம் அந்த ஒளியில் ஒரு பிரகாசமான நிழல் போலத் தோன்றியது.

சிறுமியான நான், 'தாகூர், தாகூர் ஏன் அப்படிச் செய்கிறீர்கள்?' என்றேன். அவருடைய உருவம் உண்மையாகவே மறைந்துவிட்டது. நான் அவரது உடலைத் தொட முயற்சி செய்தேன். ஆனால் முடியவில்லை. அவரை மறுபடியும் கூப்பிட்டேன். ஆனால் அவர் பதில் சொல்லவில்லை. ஆகவே அவரைப் பார்த்தபடியே ஒருவித உணர்ச்சி மேலிட்டு அங்கேயே உட்கார்ந்திருந்தேன். அது எவ்வளவு நேரம் நீடித்தது என்று எனக்குத் தெரியாது. பிறகு சிறிது நேரம் இருந்துவிட்டு அந்த ஒளி படிப் படியாக மங்கியது. மறுபடியும் தாகூரைப் பழையபடியே தெளிவாகப் பார்க்க முடிந்தது. நான் மற்றவர்களுக்குக் குரல் கொடுத்தேன். ஆனால் யாரும் அக்கறை காட்டியதாகத் தெரியவில்லை.

என் மாமியார் வீட்டில், தாகூரோடு நான் இருந்தபோது என்ன நடந்தது என்பதை பற்றி சொன்னபோது என்னுடைய மாமியார் எப்படியோ என்னைப் புரிந்துகொண்டு விட்டார். அவர் நான் சொன்னதை நம்பினார். எனது கணவரும் திருப்தி அடைந்தார். என்னுடைய மாமியார், 'அடுத்தமுறை நீ தாகூரைப் பார்க்கும்போது மந்திரம் அளிக்கும் படி கேள்' என்றார். அந்த சமயத்தில் மந்திரம் (மந்திர தீட்சை) என்றால் என்னவென்று எனக்குப் புரியவில்லை. பரிசுப் பொருள் போல ஒரு கங்கணம் அல்லது ஏதோ ஒருவகையான ஆபரணம் என்று நினைத்தேன்.

தாகூர் மீண்டும் ஒருமுறை எங்கள் வீட்டிற்கு வந்தார். அப்போது அவரிடம் 'எனக்கு மந்திரம் கொடுக்கும்படி உங்களிடம் கேட்கச் சொன்னார் என் மாமியார்' என்றேன். நான் அவர் அருகில் அமர்ந்து, ''எனக்கு ஒரு மந்திரம் கொடுங்கள், எனக்கு ஒரு மந்திரம் கொடுங்கள், எனக்கு ஒரு மந்திரம் கொடுங்கள்'' என்று தொந்தரவு செய்து கேட்டேன். நீங்கள் நினைவில் வைத்துக்கொள்ளவேண்டும். நான் அப்போது எட்டே வயதான ஒரு சிறுமிதான்.

நான் வற்புறுத்தியதும் தாகூர் 'சரி உனக்கு ஒன்று தருகிறேன். சிவபெருமானை நீ பார்த்திருக்கிறாயா?' என்று கேட்டார். 'ஆமாம், பார்த்திருக்கிறேன்' என்றேன். அவர் சொன்னார்: 'உனக்கு அவரைப் பிடித்திருந்தால் அவரை நேசி'. பிறகு அவர் 'நீ காளியைப் பார்த்திருக்கிறாயா?' என்று கேட்டார். 'ஆமாம்' என்று பதில் சொன்னேன். அவர் 'உனக்கு அவளைப் பிடித்திருந்தால் அவளை நேசி' என்று கூறினார். மறுபடியும் 'இராமனைப் பார்த்திருக்கிறாயா? ஸ்ரீகிருஷ்ணரைப் பார்த்திருக்கிறாயா?' என்று கேட்டார். 'என் தாயார் வீட்டில் பார்த்திருக்கிறேன்' என்று பதில் கூறினேன். அவர் 'உனக்கு அவர்களைப் பிடித்திருந்தால் அவர்களை நேசி' என்றார். பிறகு, 'உனக்கு என்னைப் பிடித்திருந்தால் என்னை நேசி' என்றார்.

'ஆமாம். உங்களை நேசிக்கிறேன். உங்களை மிகவும் நேசிக்கிறேன். ஆனால் நீங்கள் எனக்கு மந்திரம் கொடுக்காவிட்டால் என் மாமியார், வீட்டிற்கு என்னைத் திரும்பிப்போகவிடமாட்டார்' என்றேன் நான்.

பிறகு தாகூர், ''சரி. நீ உன் மாமியார் வீட்டிற்குப் போய், நான் உனக்கு என்ன கொடுக்க வேண்டும் என்று கேள். அது என்னிடமிருந்தால் உனக்குக் கொடுக்கிறேன். இல்லையென்றால் அதை வாங்கிக்கொள்ள உனக்குப் பணம் கொடுக்கிறேன். இப்போது என்னிடம் ஒன்றுமேயில்லை, பார்'' என்றார். நான் அவருடைய சட்டைப் பைகளில் கையை விட்டுத் துழாவினேன். அவர் சட்டைப் பைகள் காலியாக இருந்ததை நான் பார்த்தேன். பிறகு தாகூரிடம் ஒன்றுமில்லை என்பதைத் தெரிந்து கொண்டேன். 'நீங்கள் எனக்கு அதைத் தராவிட்டால் நான் மாமியார் வீட்டுக்குப் போகமாட்டேன்' என்றேன்.

நான் மாமியார் வீட்டிற்குத் திரும்பி வந்ததும் என்ன நடந்ததென்று மாமியாரிடம் தெரிவித்தேன். அவர் மிகவும் திருப்தி அடைந்தார். 'அதுதான் மந்திரம்' என்று சொன்னார்.

வருடங்கள் நகர்ந்தன. நான் பெரியவளாக வளர்ந்துவிட்டேன்; இருந்தும் அன்றையதினம் தாகூரை அந்த ஒளியில் பார்த்தபோது, அவருக்கு என்ன ஆயிற்று என்று கேட்க வேண்டும் போலிருந்தது. என்னுடைய ஆர்வம் தூண்டப்பட்டு விட்டது. ஆனால் அவரிடம் கேட்கும் சந்தர்ப்பம் வரவில்லை.

கடைசியில் என் மாமனார் என்னைத் தனியாக ஒருநாள் தட்சிணேஸ்வரம் கூட்டிப் போனார். தூய அன்னையாரிடம் என்னைச் சில நாட்களுக்கு விட்டு வைக்கும்படி தாகூர் அவரிடம் சொன்னார். என்னுடைய கேள்வியைக் கேட்க இந்த சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக் கொள்ள வேண்டும் என்று நான் மனதில் தீர்மானம் செய்து கொண்டேன். ஆனால் தாகூரிடம் அதைப்பற்றி நான் பேச முடியவில்லை. ஏனென்றால் அவரை எப்போதும் பக்தர்கள் சூழ்ந்திருந்தார்கள். மாலையில் அவர் காளி கோயிலுக்குச் சென்று ஆரதிக்கு (மாலை வழிபாடு) இருப்பது வழக்கம்.

ஒருநாள் அவர் அங்கிருந்தபோது, நான் போய் அவருடைய அறையிலேயே உட்கார்ந்து கொண்டேன், அந்தக் கேள்வியைக் கேட்பதற்காக. ஆனால் நான் என்னுடைய கேள்வியைக் கேட்பதற்குள் அவருடைய உருவம் ஒளிப்பிழம்பில் மறைவதைப் பார்த்தேன். அவரை நான் மறுபடியும் மறுபடியும் தொட்டேன். ஆனால் ஒன்றும் நிகழவில்லை. அவருடைய உடலில் எலும்புகளே இல்லாததைப் போல உடல் மென்மையாக இருந்தது. பிறகு நான் நினைவிழந்தேன். என்னுடைய தலை அவர் மடியில் சாய்ந்தது. எனக்கு சுயநினைவு வந்ததும் தாகூர் என் முதுகைக் கையால் ஆதரவு பொங்கத் தழுவிக் கொண்டிருந்தார். நான், ''தாகூர், தாகூர்! நீங்கள் உண்மையில் யார்? நீங்கள் பகவானா? நீங்கள்தான் இராமனா? நீங்கள்தான் கிருஷ்ணனா? நீங்கள் யார் தாகூர்?'' என்று கேட்டேன் பிறகு அவர் எனக்குக் குடிப்பதற்குச் சிறிது தண்ணீர் கொடுத்தார்.'

### 3. முடிவுரை

பவதாரிணி அம்மையார் இவ்விதம் வங்க மொழியில் தெரிவித்த கருத்துக்களை மொழி பெயர்த்தவராகிய சுவாமி யதிஸ்வரானந்தர், பின்வருமாறு குறிப்பிட்டார்:– ''அம்மையாருடைய நினைவில் இந்த அனுபவம் மங்காமல் இருப்பது எவ்வளவு சுவாரஸ்யமானது என்பதைக் கவனிக்க வேண்டும். இத்தகைய அனுபவங்கள் என்றென்றைக்குமாக நிலைத்திருக்கும்.''

அம்மையார் பெங்களூர் ஆசிரமத்தில் இருந்தபோது சுவாமி யதிஸ்வரானந்தர் 'தாகூர் உங்களுக்கு மந்திரம் உபதேசித்தாரா?' என்று அம்மையாரிடம் கேட்டார். முதலில் அம்மையார் பதில் சொல்வதற்குத் தயங்கினார். ஆனால் ஆவலுடன் வற்புறுத்திக் கேட்கப் படவே 'ஆம்' என்று பதில் சொன்னார். அதை விளக்கமாகவும் கூறினார். ஆனால் அப்போது அம்மையார் சொன்னவைகள் அவருடைய சொந்த விஷயத்தையொட்டி இருந்ததால் அவைகள் பதிவு செய்யப்படவில்லை.

பிறகு சுவாமி யதிஸ்வரானந்தர் கூறினார்: ''அம்மையாருடைய உறவினர்கள் அனைவரும் இறந்துவிட்டனர். ஆனால் யார் போனதும் இந்த அம்மையின் உள்ளத்தைப் பாதிக்கவே இல்லை. அம்மையார் 'ஸ்ரீராமகிருஷ்ணரே என்னுள் நிறைந்திருக்கிறார்' என்று குறிப்பிட்டார். அவர் தனது சொத்துக்கள் எல்லாவற்றையும் ஸ்ரீராமகிருஷ்ண மிஷனுக்குக் கொடுத்துவிட்டார். இப்போது ஒப்பற்ற பரிபூர்ண துறவு வாழ்க்கை வாழ்கிறார். தாகூரிடமிருந்து அவருக்குப் பணம் வந்தது. இப்போது அந்தப் பணம் தாகூரிடமே திரும்பிச் சென்றுவிட்டது.

''அம்மையாருக்கு மோட்சம் வேண்டும் என்ற விருப்பம் இல்லை. இறந்து போகவும் அவர் பயப்படவில்லை. மீண்டும் பிறவி எடுத்து இந்த உலகிலே வருவதற்கு கூட அவர் பயப்படவில்லை. அம்மையார் கூறுகிறார்: ''தாகூருடைய ஆணைப்படியே நடக்கும். கிரகஸ்தர்களாயினும் சரி, துறவிகளாயினும் சரி, நாம் எல்லோரும் தாகூருக்குப் பணி செய்கிறோம்.'' *

---

* பவதாரிணி காசியில் சில ஆண்டுகளுக்கு முன்பு காலமானார்.



சிறுவர் பகுதி :

# கடவுள் எங்கே இருக்கிறார்?

பிரம்மசாரி முத்துக்குமார்

வெகு காலத்திற்கு முன்பு ஒரு நகரத்திலே தேவதாசன் என்பவன் இருந்தான். அவன் பல புராணங்களையும், சாஸ்திரங்களையும் நன்றாகப் படித்திருந்தான்.

தேவதாசன் சாதாரண ஆசார அனுஷ்டானங்களையும் கூட மிகக் கடுமையாகப் பின்பற்றி வந்தான். சமய சின்னங்களும், அடையாளங்களும் அவனுடைய உடலை அலங்கரித்தன.

ஒரு நாள் தேவதாசனுக்குப் புதுமையான ஆசை தோன்றியது. அதாவது கடவுளைக் காண வேண்டும் என்று அவன் விரும்பினான். கடவுள், மேலே ஏதோ ஒரு உலகத்தில் ஒரு சிம்மாசனத்தில் உட்கார்ந்து கொண்டிருக்கிறார் என்பது அவனுடைய எண்ணம். என்றாே ஒரு நாள் கடவுள் சொர்க்கத்தில் இருந்து இறங்கி வந்து தனக்குக் காட்சி கொடுப்பார் என்று நம்பி வந்தான்.

ஒவ்வொரு நாளும் தவறாமல் கோயில்களுக்குச் சென்று வழிபட்டான். அவன் கோயில்களின் முன்னால் சிதறவிட்ட தேங்காய்களுக்கு ஓர் அளவே இல்லை. தேவதாசனின் செலவில் தெய்வங்களின் விக்கிரங்களுக்கு நாள்தோறும் குடம் குடமாகப் பால் அபிஷேகம் நடைபெற்றது. கும்பாபிஷேகங்களுக்கும், யாகங்களுக்கும் அவன் தாராளமாகப் பணம் செலவு செய்தான்.

கடவுளைக் காணவேண்டும் என்பதற்காக தேவதாசன் இவ்வளவு காரியங்களையும் செய்து பார்த்தான். ஆனால் சொர்க்கத்திலுள்ள அவனுடைய கடவுள் கீழே இறங்கி வரவுமில்லை. அவனுக்குக் காட்சிக் கொடுக்கவுமில்லை.

தேவதாசன் ஒரு சிறந்த பக்தன் என்று ஊரில் உள்ளவர்கள் எல்லாம் பேசிக் கொண்டார்கள். அக்கம் பக்கத்திலுள்ள கிராமங்களிலிருந்து ஏழை எளியவர்கள், அகதிகள், அனாதைகள் எல்லாம் அவனிடம் சிறு சிறு உதவிகள் கேட்டு வர ஆரம்பித்தார்கள்.

தன்னிடம் உதவி கேட்டு வந்தவர்களை எல்லாம் தேவதாசன் வெறும் கையோடு திருப்பி அனுப்பிவிட்டான். அவனுடைய அன்பு முழுவதும் யாருமே பார்த்திராத சொர்க்கத்தில் உள்ள கடவுளிடமே இருந்தது.

தேவதாசனுக்குக் கடவுளைக் காணவேண்டும் என்ற ஆசை மேலும் தீவிரமாகியது. இன்னும் அதிகமாக ஆசார அனுஷ்டானங்களை மிக மிக தீவிரமாக அனுஷ்டித்தான். உபவாசங்கள் இருந்தான். சமய சம்பந்தமான புத்தகங்களை எல்லாம் திரும்பத் திரும்ப படித்தான். ஆனால் அவன் பகவானை மட்டும் பார்க்கவில்லை.

வேதங்களைப் படித்தான், கீதை பாராயணம் செய்தான். ஆனால் கடவுள் மட்டும் வரவே இல்லை.

தேவார, திருவாசகங்களை உருப் போட்டான். ஆனாலும் சிவபெருமானின் காட்சி கிடைக்கவில்லை.

குரானை ஓதினான்; பைபிளைக் கற்றுத் தேர்ந்தான். ஆனால் பரமபிதா வரவில்லை.

கடவுளைத் தரிசிப்பதற்குத் தேவதாசன் நீண்ட தூரங்களிலுள்ள புண்ணிய ஸ்தலங்களுக்கும் யாத்திரை செய்தான்.

கயையிலும் காசியிலும் கடவுளைத் தேடினான்.

கைலை மலையிலும் கன்னியாகுமரியிலும் சிரமப்பட்டு இறைவனைத் தேடினான்.

மசூதியிலும் தேவாலயங்களிலும், மண்டியிட்டுத் தொழுதான்.

தெய்வத்தைத் தேடி உலகமெல்லாம் அலைந்தான்.

என்ன ஆச்சரியம்! அவன் தேடிய கடவுளை அவனால் கண்டுபிடிக்கவே முடியவில்லை.

ஒரு நாள் தேவதாசன் கடவுளைத் தேடிக் களைத்தவனாக ஒரு சத்திரத்திலே ஓய்வு எடுத்துக் கொண்டிருந்தான்.

தான் எங்கு தேடியும் தனக்குக் கடவுள் தரிசனம் தரவில்லையே என்று தேவதாசன் மிக மிக வருந்தினான். 'தெய்வமே! உன்னை நான் உலகமெல்லாம் தேடி களைத்து விட்டேனே? இன்னும் நீ மனம் இரங்கவில்லையா? உன்னை நான் பார்க்கவே முடியாதா?' என்று தேவதாசன் புலம்பினான். உடனே அவன் தங்கியிருந்த அறைக்குள் ஒரு பெரிய ஜோதி தோன்றியது.

ஆண்டவனின் குரல் அசரீரியாக அந்த அறையிலே ஒலித்தது:

''தேவதாசா! என்னை ஏன் அங்கும் இங்குமாகத் தேடி அலைகிறாய்? நான் உன்னைத் தேடி ஒவ்வொரு நாளும் உன் வீட்டுக்கு வந்தேன்.

''ஏழையாய் உன்னிடம் யாசகம் கேட்டு வந்தேன். நீ என் பசியைத் தீர்க்கவில்லை. அகதியாய் உன்னை அண்டினேன். என்னை நீ ஆதரிக்கவில்லை. அனாதையாய் உன்னிடம் வந்தேன். நீ எனக்கு ஆறுதல் அளிக்கவில்லை. கைம்பெண்ணாக உன் வீடு தேடி வந்தேன். நீ என் கண்ணீரைத் துடைக்கவில்லை.

''அன்பனே! என்னை மசூதியிலோ, அல்லது மலையிலோ குகையிலோ தேடுவதால் மட்டும் பயனில்லை. நான் வேதங்களிலோ புராணங்களிலோ ஆகமங்களிலோ கோயில் கொள்ளவில்லை. கங்கைக் கரையில் கிணறு தோண்டுவது முட்டாள்தனம் அல்லவா? கைப்புண்ணைப் பார்க்கக் கண்ணாடி தேடுவதா? மக்கள் வடிவத்திலே நான் இருக்கிறேன். மனிதனின் ஆத்மாவாக நானே இருக்கிறேன்.

''எவனொருவன் என்னை—ஏழை எளியவர்கள், அகதிகள் அனாதைகள், கைம்பெண்கள், திக்கற்றவர்கள், தாழ்த்தப்பட்டோர்கள், பாமரர்கள் ஆகியவர்களிடம் கண்டு அவர்களுக்குத் தொண்டு செய்கிறானோ—அவனே என்னுடைய தலை சிறந்த பக்தன். அவன் என்னை வெளியில் தேடி அலைய வேண்டிய அவசியம் கூட இல்லை. நான் அவனிடம் வாழ்கிறேன். அவன் என்னிடம் வாழ்கிறான்'' என்று தெய்வத்தின் குரல் அசரீரியாக ஒலித்து ஓய்ந்தது.

தேவதாசன் ஒரு பெரிய உண்மையை உணர்ந்தான். அப்போதுமுதல் கடவுளை மக்கள் வடிவில் பார்த்துச் சேவை செய்யத் தொடங்கினான்.

'ஒரு பேரொளியாகிய தெய்வத்தின் ஒளிக்கதிர்கள் போன்றவர்களே மக்கள். மனிதனுக்குச் செய்யும் தொண்டே கடவுளுக்குச் செய்யும் தலை சிறந்த வழிபாடாகும்' என்று தேவதாசன் உணர்வு பெற்றான்.

தேவதாசன் மனிதனில் ஈசனைக் கண்டான். மனித சேவையில் இன்பமும், சாந்தியும், திருப்தியும் அடைந்தான்

அதுவே அவனை மகோன்னத நிலைக்கு உயர்த்தியது.



# சுவாமி அத்புதானந்தரின் போதனைகள்

ஹா! இந்த முட்டாள்தனத்தை என்ன வென்று சொல்வது? அத்வைத பாவனையை ஒருவருடைய உள்ளத்தில் வலுக்கட்டாய மாகப் புகுத்த முடியுமா என்ன? அது மெல்ல மெல்ல வளர்ந்து உருவாக வேண்டிய பாவனை. 'பழம் பெரியதாக வளர்ந்து விட்டால், மல தானே உதிர்ந்து விடுகிறது' என்று ஸ்ரீ குரு தேவர் கூறுவதுண்டு. உண்மையான அத்வைதம் என்ன என்பதை இதிலிருந்து கற்பனை செய்து பாருங்கள்.



சுவாமி அத்புதானந்தர்

புல்தரையின் மீது ஸ்ரீகுருதேவரால் நடக்க முடியாது! ஆத்மா—பிரம்மத்தை ஒருவன் சாட் சாத்கரித்து விட்டால், அவன் எல்லாப் பொருள்களுடனும் தன்னை ஐக்கியமாக உணர் வது பெரிய அளவுக்கு மிகுந்து விடுகிறது. ஆனால் சாதனையின் ஆரம்பத்தில் இருந்தே நித்திய அநித்தியப் பொருள்களின் விவேக சக்தியையும், ஒன்று—பல ஆகிய இரண்டுக்கும் உள்ள விவேக சக்தியையும் சாதகன் கூர்மை யாக வைத்துக்கொள்ள வேண்டும்.

'உலகத்தால் மயக்கம் அடைந்து விடாதே. ஆழ்ந்து உள்ளே சென்று ஜகத் சிற்பியை (சிருஷ்டி கர்த்தாவாகிய கடவுளை) அறிந்து கொள்' என்று ஸ்ரீகுருதேவர் அடிக்கடி சொல் வதுண்டு.

கடவுளைப் பற்றி மக்கள் பேசுகிறார்கள். அவர்கள் பேசுவது உதட்டிலிருந்து மட்டும் எழும் பேச்சு. கடவுளிடம் அவர்களுக்கு உண் மையான நம்பிக்கை இருக்கிறதா என்ன?

அவரவர்களுடைய கர்மத்திற்கேற்ப இறை வன் அளித்தருள்கிறார். அனைவருக்கும் அவர வருக்கும் உரிய பங்கு கிடைக்கவே செய்கிறது. உண்மையில், மக்கள் கவலைப்படுவதற்குக் காரணமே இல்லை. ஆனால் மக்கள் பொதுவாகக் கடவுளிடம் நம்பிக்கை வைப்பதே இல்லை. ஆதலால் அவர்கள், தங்களுக்கு உரிய பங்கைக் காட்டிலும் அதிகமாக வேண்டும்—என்று எதிர்பார்க்கிறார்கள். இதுதான் மனிதனுடைய எல்லாத் துன்பங்களுக்கும் கவலைகளுக்கும் மூல காரணமாக இருக்கிறது.

கடவுளிடம் நம்பிக்கைக் கொண்டவர்களோ, திருப்தியுடன் வாழ்கிறார்கள். அவர்கள் தெய் வத்தை நம்பிச் சார்ந்திருந்து மனத் திருப்தி யோடு இருக்கிறார்கள்.

கடவுளிடம் நம்பிக்கை இல்லாதவர்களுடன் தொடர்பு கொள்ளக் கூடாது. அவ்விதம் நம் பிக்கை இல்லாதவர்கள், தாங்களும் கஷ்டப் படுகிறார்கள்; மற்றவர்களிடமும் தம்முடைய அதிருப்தியைச் செலுத்தி விடுகிறார்கள்.

கடவுளைச் சார்ந்து வாழாமல் பிரார்த்தனை யும் தியானமும் செய்வதால் என்ன பயன் உண்டு? இவ்விதம் ஆண்டவனைச் சார்ந்திருக் காமல் உள்ள ஒருவனிடம், வேறு எவ்வளவு தான் நல்ல பண்புகள் இருந்தாலும், அவை எல்லாம் பயனற்றவைகளே ஆகும்.

துறவி ஒருவர் எல்லாவற்றையும் வென்று விடுகிறார். அனால், நான் ஒரு சன்னியாசி என்ற பாவனை அவரைத் தொடர்ந்து பின்னாலேயே வருகிறது. அற்பமான வகையிலே அவரை ஒருவன் அவமதித்துவிட்டாலும் சன்னியாசி கோபம் கொள்கிறார். 'நான் என்ன அவனை விட மட்டமானவனா?' என்று நினைக்கிறார்.

பெருமையும் கௌரவமும் தங்களுக்குக் காட்டப்பட வேண்டும் என்று சாதுக்கள் பெரி

தும் ஆவல் கொள்கிறார்கள். ஆனால் இந்த கௌரவ ஆசை சாதுக்களுக்கு மிக மிக மோசமான பகைவன் ஆகும். ஆன்மீகத்தை மட்டுமே இலட்சியமாகக் கொண்டவர்கள் இந்த கௌரவத்தின் மீது வைக்கும் ஆசையை உதறி எறிய வேண்டும்.

உலகப் பற்றுள்ள மனிதன் பணத்துக்காக அடிமை போல உழைத்து உழல்கிறான். ஆனால் கடவுளுக்காக அப்படி யாரும் உழைப்பதற்கு விரும்புவதில்லை. கடவுள் நாட்டத்தில் பணம் செலவு செய்ய வேண்டிய அவசியமும் கூட இல்லை. கடவுளுக்காக அடிமை போல உழைப்பவன் ஒரு பாக்கியசாலி ஆவான்.

உனக்கு என்ன என்ன ஆற்றல்கள் இருந்தாலும் அவைகளை நல்ல நோக்கத்துக்குப் பயன்படுத்து. மற்றவர்களுக்கு எந்தவித துன்பமும் செய்யாமலிருப்பதில் கண்ணும் கருத்துமாக இரு.

தன்னுடைய வாழ்க்கையைப் பிறர் நன்மைக்காக அர்ப்பணம் செய்திருப்பவன் யாரோ, என்னுடையது உன்னுடையது என்னும் பேத புத்தியை எல்லாம் துடைத்து விட்டவன் யாரோ, மற்றவர்களின் துன்பத்தில் அனுதாபம் கொண்டு எவனுடைய இதயம் ரத்தம் சிந்துகிறதோ — அவனை விட பெரிய பாக்கியசாலி வேறு யார் இருக்கிறார்கள்?

நம்மிடம் சுயநல புத்தி மிக அதிகமாக ஊன்றிவிட்டதால், கஷ்டப்படும் மக்களைப் பற்றி நாம் தயை உணர்ச்சி கொள்வதே கிடையாது.

மற்றவர்களிடமுள்ள குற்றம் குறைகளைக் கண்டுபிடிப்பதே நம்முடைய ஒரே வேலையாக இருக்கிறது. பிறரைப் பற்றிய வதந்திகளைப் பரப்புவதும் நமது வேலையாக உள்ளது. மற்றவர்கள் சுகமாக இருந்தாலோ, நன்றாக வாழ்ந்தாலோ நமக்குப் பொறாமையே நிறைகிறது. இப்படிப்பட்ட இயல்புகள் நம்மிடம் இருக்கும் போது, துன்பத்தைத் தவிர வேறு என்ன நமக்குக் கிடைக்கும் என்று நாம் எதிர்பார்க்க முடியும்?

வேறு எந்த நோக்கமும் இல்லாமல், சேவை செய்ய வேண்டும் என்னும் ஒரே இலட்சியத்துடன் மற்றவர்களுக்குப் பணி செய்வதில் ஈடுபட்டுள்ளவர்களின் மீது பகவானுக்கு அத்தியந்தத் திருப்தி ஏற்படுகிறது.

நீ ஏற்கெனவே உன்னுடைய நீண்ட பொன்னான ஐம்பதாண்டு காலத்தை, கடவுள் இருக்கிறாரா இல்லையா என்பதை மட்டும் தீர்மானிப்பதில் செலவழித்தாகி விட்டது. இப்படிப்பட்ட ஒருவருக்கு நான் என்ன சொல்லட்டும்? இனிமேல் நீ ஜபமும் தியானமும் செய்ய ஆரம்பிக்கப்போவது எப்போதுதானோ?

எவன் அச்சமும் சந்தேகமும்கொண்டு வாழ்கிறானோ அவனால் எந்தவிதத்திலும் முன்னேற்றமடைய முடியாது. ஆன்மீகத் துறையிலும் முன்னேற்றமடைய முடியாது; இலௌகிகத் துறையிலும் முன்னேற்றமடைய முடியாது. அவனுடைய மனம் சுருங்கிக் குறுகி இருக்கிறது.

உலகம் உண்மையா இல்லையா என்பதைக் கூட நினைக்காமல், சத்திய வஸ்துவாகிய பகவானை அடைவதற்கு எவன் ஒருவன் முன்னேறிச் செல்கிறானோ அவன் மட்டுமே வீரன் ஆவான். அவன் மட்டுமே பெருமை அடைகிறான்.

உனக்குக் காய்ச்சல் அடித்தால், வாய்க்கு எல்லாம் கசப்பாகச் சுவைக்கிறது. இனிப்புப் பண்டங்கள் கூட உனக்குப் பிடிப்பதில்லை.

அதைப்போல, உலகப் பொருள்களை அனுபவிக்க வேண்டும் என்னும் ஆசை உனக்கு இருக்கும் வரையிலும் பிரார்த்தனை, தியானம், உபவாசம், விழித்திருந்து சாதனையை மேற்கொள்ளும் விரதம் — ஆகிய இவைகளில் உனக்குப் பிடிப்பு ஏற்படாது. பிரார்த்தனை, தியானம் எல்லாம் கசப்பாகவே இருக்கும். உலகத்தின் மீதுள்ள இந்தக் காய்ச்சல் தணியும் போது பிரார்த்தனை, தியானம் முதலியவைகள் தித்திக்க ஆரம்பிக்கும். பிறகு விரைவிலேயே மனம் அவைகளில் ஈடுபடும். மனதை மயக்கும் எந்த விஷயமும் உன்னை உனது இலட்சியத்தில் இருந்து தளரச் செய்ய முடியாது.



வயிற்றுக்கு அடிமையாக உள்ளவன் கடவுளைத் தொழுவது அரிது.

—ஸா அதி(பாரசீகம்)



# நம்பிக்கை விளைவித்த அற்புதம்!

பிரம்மசாரி நிரஞ்ஜன சைதன்யா

இரண்டு பேர் கிராமம் கிராமமாகப் போய்க் கொண்டிருந்தார்கள். ஒருவர் சற்று வயதான வர். மற்றொருவர் இளைஞர். இருவரும் பக்தி யில் பழுத்தவர்கள். இரண்டு பேரும் அருமை யான பக்திப் பாடல்களைப் பாடிக்கொண்டே, ஊர் ஊராகப் பிரயாணம் செய்து கொண் டிருந்தார்கள்.

பெரியவர் கைகளால் தாளம் போட்டுக் கொண்டே பாடினார். இளைஞர் தம்புராவை மீட்டிக்கொண்டே பாடினார். கல்லையும் கரைய வைக்கும் இசை அவர்களுடையது. அவர்கள் பாடிய பாட்டு, கேட்டவர்களின் உள்ளங்களை எல்லாம் நெகிழ வைத்தது. அந்தப் பக்தமணி களுடைய பாடல்களைக் கேட்டுக்கேட்டுப் பக் தர்கள் பரவசம் அடைந்தார்கள். பாவிகளும் பரிசுத்தவான்களானார்கள். ஆச்சரியமான பாட கர்கள் இவர்கள்!

பல ஆயிரக்கணக்கான மக்களுக்குக் கடவுளை அடையும் பாதையைக் காட்டிய இவர்கள் யார்? ஒருவருக்கொருவர் என்னதான் இவர் களுக்கு உறவு?

பிறவியிலேயே இவர்கள் மகான்களா? அல் லது தந்தையும் மகனும் சேர்ந்து பாடிக் கொண்டு போகிறார்களா? இல்லை, இரண் டுமே உண்மையில்லை. அப்படியானால் இவர்கள் யார்?

1

இந்தியாவில் மொகலாயர்கள் ஆட்சி செய்து வந்த காலம் அது. ஜஹாங்கீர் டில்லியைத் தலைநகராகக் கொண்டு ஆட்சி செய்து வந் தார். அவருடைய ஆளுகைக்குப்பட்ட ஒரு கிராமத்திலே **மௌஜி** என்ற பையன் வாழ்ந்து வந்தான்.

**மௌஜிக்குத்** தாய் தந்தையர் கிடையாது. அவனுக்குப் புத்தி தெரியும் வயது வருவதற்கு முன்பே அவர்கள் காலமாகிவிட்டார்கள். மௌஜி என்ற பெயரை யார் வைத்தார்கள் என்பதும் அவனுக்குத் தெரியாது. எப்படியோ அந்தப் பெயர் வந்தது. ஊர் மக்களும் அவனை அப்படியே அழைத்தார்கள். அவன் ஓர் அனாதை.

மௌஜிக்குப் படிப்பு வாசனை அறவே இல்லை. 'நீ பள்ளிக்கூடம் சென்று படி' என்று ஒருவரும் அவனிடம் சொன்னது கிடையாது. அவனும் பள்ளிக்கூடம் போகவேண்டும் என்று நினைத்தது கிடையாது. அப்படிப்பட்ட ஓர் அவசியம் தனக்கு உண்டா இல்லையா என்பதே அவனுக்குத் தெரியாது. ஆகவே, தன்னைப் பள்ளிக்கூடத்திற்கு அனுப்பி வைக்கும்படி அவன் யாரையும் கேட்டதும் இல்லை.

ஊரில் இருப்பவர்கள் கொடுத்த உணவை உட்கொண்டே அவன் வளர்ந்தான். அவனுக் கென்று நிலையான இருப்பிடமும் கிடையாது. எந்த வீடாவது பூட்டப்பட்டிருந்தால், அதன் திண்ணையிலே அவன் படுத்துக் கொள்வான். அல்லது, இடிந்து பாழடைந்து கேட்பாரற்றுப் போன எந்தக் கட்டடத்திலாவது படுத்துக் கொள்வான்.

மௌஜிக்கு உள்ளொன்று வைத்துப் புறம் ஒன்று பேசத் தெரியாது. கள்ளம் கபடமற்ற நெஞ்சம் அவனுடையது.

2

அந்தக் கிராமத்திலே ஒரு பண்ணையார் இருந்தார். அவருடைய மாடுகளை மௌஜி மேய்ப்பது வழக்கம். அதற்கு மாதந்தோறும் ஊதியமாக இரண்டு ரூபாய்களை மௌஜிக்குக் கொடுத்து வந்தார். அதோடு மௌஜிக்குத் தேவையான எளிய உணவுக்கும் உடைக்கும் பண்ணையாரே வசதி செய்து கொடுத்திருந் தார். இப்படியாகத்தான் அந்த ஊரிலே மௌஜியின் வாழ்க்கைச் சக்கரம் சுழன்று கொண்டிருந்தது.

மௌஜி ஒரு தனிக்காட்டு ராஜா. கல்வி அறிவு அவனுக்கு இல்லாமல் போனதுடன், சான்றோர்களுடைய தொடர்பும் அவனுக்கு இல்லாமல் போய்விட்டது. சிறுவனாக இருந்த தால் உலக அனுபவமும் அவனுக்குப் போத வில்லை. ஆதலால், பல சந்தர்ப்பங்களில் அவன், பொய்யை உண்மை என்றும் உண்மை யைப் பொய் என்றும் நம்பி ஏமாற்றம் அடைந் திருக்கிறான். அவனுடைய உள்ளத்தில் ஏதா வது ஒன்று சரி என்று பட்டுவிட்டால், அதை

அவன் விடாமுயற்சியுடன் பின்பற்றுவான். மொத்தத்தில் அவனுடைய சிந்தனைகள், சுதந்திரச் சிந்தனைகளாக இருந்தன.

இப்படி எல்லாம் இருந்தாலும்கூட, உயர்ந்த ஒரு குணமும் அவனிடம் இருந்தது. அதாவது, எப்போதும் எந்த நிலையிலும் உண்மையையே பேசும் குணம் அவனுடையது.

### 3

ஒரு நாள் மௌஜி வழக்கம் போல மாடுகளை ஓட்டிக்கொண்டு ஆற்றங்கரைக்குப் போனான். மாடுகளை மேய விட்டுவிட்டு ஆற்றங்கரையிலிருந்த ஒரு மரத்தடியில் சாவகாசமாக உட்கார்ந்தான். தூரத்தில் மாடுகள் மேய்ந்து கொண்டிருந்தன. அவைகளைப் பார்த்துக் கொண்டே அவன் ஏதேதோ பாடல்களை முணுமுணுத்துக் கொண்டிருந்தான். நேரம் நழுவிக் கொண்டிருந்தது.

அப்போது அந்த வழியாக யாரோ ஒருவர் வந்தார். அவரைப் பார்த்தவுடனேயே தனக்கு அறிமுகமில்லாத யாரோ வெளியூர் பிராம்மணர் என்பது மௌஜிக்குப் புரிந்தது. அவர், தம்முடைய நெற்றியில் பளிச்சென்று பெரிய நாமம் போட்டிருந்தார். அவருடைய தோளிலே சிறிய ஒரு துணிப்பை தொங்கியது.

வெயிலில் நடந்துவந்த களைப்பின் காரணமாக, அவரும் மௌஜி உட்கார்ந்திருந்த மரத்தடியில் சற்றுத் தூரத்தில் அமர்ந்தார். சிறிது நேர ஓய்வுக்குப் பிறகு ஆற்றில் இறங்கி நீராடினார். பிறகு தம்முடைய பையிலிருந்து வேறு ஆடையை எடுத்து உடுத்திக் கொண்டார். கரையில் உட்கார்ந்து கண்களை மூடினார். வலது கையால் மூக்கைப் பிடித்துக்கொண்டு ஆடாமல் அசையாமல் கொஞ்ச நேரம் உட்கார்ந்த படியே இருந்தார். பிறகு பையிலிருந்து எதையோ எடுத்துச் சாப்பிட்டுப் பசியைத் தீர்த்துக் கொண்டார். அவ்வளவுதான். எல்லாம் முடிந்தது. மீண்டும் புறப்படுவதற்குத் தயாரானார்.

அதுவரையிலும், மௌஜி மரத்தடியில் உட்கார்ந்து, அவருடைய செய்கைகளை எல்லாம் வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தான். அவர் அங்கிருந்து கிளம்பிப் போகப் போகிறார் என்பது தெரிந்தது. உடனே மௌஜி வேகமாக அவரை நெருங்கிச் சென்று 'சுவாமி; அடியேனின் வணக்கத்தை ஏற்றுக்கொள்ள வேண்டும்' என்று சொன்னான். அதற்குப் பதிலாக, வெளியூர்காரராகிய பிராம்மணர் 'உனக்குக் கடவுளின் திருவருள் கிடைக்கட்டும்' என்று வாழ்த்துக் கூறினார்.

**மௌஜி:** சுவாமி, தாங்கள் யார்? தாங்கள் எந்த ஊரிலிருந்து வருகிறீர்கள்? இப்போது எங்கே போய்க்கொண்டிருக்கிறீர்கள்?

**பிராம்மணர்:** நான் ஒரு பண்டிதன். கேசம் புரத்திலிருந்து வந்து கொண்டிருக்கிறேன். தௌலதாபாத்திற்குப் போகிறேன். அங்கே என்னுடைய சீடர்கள் இருக்கிறார்கள்.

**மௌஜி:** ரொம்பவும் சரி. பண்டிதரே, எனக்கு ஒரு சிறிய சந்தேகம். தாங்கள் அனுமதியளித்தால், தங்களுக்கு அதைத் தெரிவிக்க விரும்புகிறேன்.

**பிராம்மணர்:** என்னப்பா சந்தேகம்? தாராளமாக நீ உன்னுடைய சந்தேகத்தைத் தெரிவிக்கலாம்.

**மௌஜி:** தாங்கள் இவ்வளவு நேரமாகக் கண்களை மூடி மூக்கைப் பிடித்துக்கொண்டு என்ன செய்து கொண்டிருந்தீர்கள்?

**பிராம்மணர்:** ப்பூ! இதுதானா உன்னுடைய சந்தேகம்? நான் அப்போது பகவானை தரிசித்துக் கொண்டிருந்தேன்.

**மௌஜி:** ஓ, அப்படியா! மிகவும் நல்லது. அதைத் தெரிந்து கொள்வதற்காகத்தான் கேட்டேன். தங்கள் பிரயாணத்தைச் சற்று நேரம் தடைப்படுத்தியதற்காக மன்னிக்கவும். நீங்கள் போய் வரலாம்.

மௌஜி அந்த வெளியூர்காரருக்கு வணக்கம் தெரிவித்து அவரை வழி அனுப்பினான்.

### 4

சில வினாடிகள் மௌஜி, கற்சிலையைப் போல மௌனமாக மரத்தடியிலேயே உட்கார்ந்திருந்தான். 'இவ்வளவு நேரமாகக் கண்களை மூடிய நிலையில் மூக்கைப் பிடித்துக்கொண்டு இந்தப் பிராம்மணர் பகவானைத் தரிசித்திருக்கிறார்' என்ற எண்ணமே அவனது உள்ளத்தில் சுழன்றது. சுயமாகச் சிந்திக்கும் அறிவு மௌஜிக்குக் கிடையாது. ஆகவே அந்தப் பிராம்மணர் சொன்னதை அப்படியே முழுக்க முழுக்க உண்மையென்றே அவன் நம்பிவிட்டான்.

மௌஜி தனக்குச் சொந்தமாக இருந்த ஒரே ஆடையை அவிழ்த்துக் கரையிலே வைத்தான். பிறகு வெளியூர்க்காரர் செய்ததைப் போலவே ஆற்றில் மூழ்கிமூழ்கி எழுந்தான். கரையேறி வந்து பழையபடியே தன்னுடைய ஆடையை எடுத்துப் போட்டுக் கொண்டான். உட்கார்ந்து கண்களை மூடினான். மூக்கை அழுத்திப் பிடித்தான். கண்களை மூடியவுடனே பகவானின் தரிசனம் தனக்குக் கிடைக்கும் என்று மௌஜி நம்பினான். ஆனால் கண்களை மூடியவுடன் இருட்டாகத்தான் இருந்ததே தவிர, பகவானின் தரிசனமும் அவனுக்குக் கிடைக்கவில்லை; பகவதியின் தரிசனமும் அவனுக்குக் கிடைக்கவில்லை.

அந்த பிராம்மணருக்குக் கிடைத்த பகவானின் தரிசனம் தனக்கு ஏன் கிடைக்கவில்லை என்று அவனுக்கு ஆத்திரம் ஆத்திரமாக வந்தது. ஒரு வேளை கண்களைச் சரியாக அழுத்தி மூடவில்லையோ என்று அவன் சந்தேகப்பட்டான். ஆதலால் கண்களை மேலும் அவன் இறுக்கி மூடிக் கொண்டான். ஆனாலும் பகவான் அவனுக்குப் புலப்படவே இல்லை. அவனுக்கோ ஆத்திரம் அதிகமாகிக்கொண்டே வந்தது.

சில விநாடிகள் கடந்தன. 'மூக்கைச் சரியாக மூடாததால்தான் பகவானை நம்மால் பார்க்க முடியவில்லையோ' என்று மௌஜி நினைத்தான். ஆகவே அந்த நினைப்பு வந்தவுடனே மூக்கைத் தன்னால் இயன்ற மட்டும் மேலும் அழுத்தி மூடினான்! மூச்சுக் காற்றுத்தான் தடைப்பட்டதே தவிர, பகவான் என்னவோ வரவில்லை.

ஆனால் மௌஜியோ தனது முயற்சியைக் கைவிடுபவனாக இல்லை. 'உயிரே போனாலும் சரி. பகவானை நான் எப்படியும் பார்த்தே ஆகவேண்டும். அப்படி அவரைப் பார்க்காத வரையில் மூக்கை நான் இறுக்கிப் பிடிப்பதை நிறுத்த மாட்டேன்' என்று தனக்குள்ளாகவே சொல்லிக் கொண்டான்.

ஏதாவது ஒரு முடிவை எடுத்தால், கடைசி வரையிலும் அதை நிறைவேற்றிப் பார்ப்பது மௌஜியின் இயல்பு. அவனுடைய பிடிவாதம் அவனுடைய உயிருக்கே உலை வைக்கும் கட்டத்தை நெருங்கியது. மௌஜியின் நிலைமை மிக மிக மோசமாகிவிட்டது.

## 5

அங்கிங்கெனாதபடி எங்கும் பரம்பொருள் நீக்கமற நிறைந்திருக்கிறார். எப்போது, எந்த இடத்தில், எது நடந்தாலும் உடனுக்குடன் பகவானுக்குத் தெரிந்துவிடும். எல்லா உயிர்களுக்கும் ஏற்படும் துன்பத்தை அப்போதைக்கப்போதே பகவான் உணர்ந்துகொள்கிறார்—இந்த உண்மையை உயிராகிய கயிறு, பகவான் ஆசனமாகக் கொண்டு எழுந்தருளியுள்ள ஆதிசேஷனோடு இணைக்கப் பட்டிருப்பதாகச் சொல்வார்கள்.

மாடு மேய்க்கும் பையனின் உயிருக்கு நேர்ந்த ஆபத்து, பகவானின் ஆசனமாகிய ஆதிசேஷனையே அசைத்தது. அதன் விளைவாக, உயிர் போகும் நிலையிலிருந்த மௌஜியின் முன்னால் பகவான் தோன்றி, ''குழந்தாய், மௌஜி! கண்களைத் திறந்து பார். இதோ, நீ தரிசிக்க விரும்பிய பகவான் வந்துவிட்டேன் பார்'' என்று அன்பு ததும்பக் கூறினார்.

அவருடைய குரலைக் கேட்டதும் மௌஜி கண்களைத் திறந்து பார்த்தான். மூக்கை இறுக்கியிருந்த பிடியையும் தளர்த்தினான். கொஞ்சம் காற்றை உட்கொண்டு தன்னை ஆசுவாசப்படுத்திக் கொண்டான். பிறகு மௌஜியும் பகவானும் பேசிக் கொண்டார்கள்.

**மௌஜி:** யார் நீ? ஏன் இங்கே வந்தாய்?

**பகவான்:** நான்தான் நீ தரிசிக்க விரும்பிய பகவான். உனக்குக் காட்சியைத் தருவதற்காகவே இங்கே வந்திருக்கிறேன்.

**மௌஜி:** அடி சக்கை! பேஷ், பேஷ்! நீங்கள்தான் பகவான் என்பதற்கு அத்தாட்சி ஏதாவது வைத்திருக்கிறீர்களா?

**பகவான்:** உனக்கு எந்த விதத்தில் அத்தாட்சி வேண்டுமோ கேள். அப்படியே அதே விதத்தில், நீ விரும்பியபடி அத்தாட்சி தருகிறேன்.

**மௌஜி:** வீணாகக் கதையளந்து நீங்கள் என்னை ஏமாற்ற முடியாது. உங்களைச் சற்று முன்பு பார்த்ததாக அந்த பிராம்மணர் இப்போது தான் எனக்குச் சொல்லிவிட்டுப் போனார். அவர் கொஞ்சதூரம்தான் போயிருப்பார். ஓட்டமாய் ஓடிப்போய் அவரை நான்

கையோடு அழைத்து வருகிறேன். அவர் வந்து, 'நான் கண்ட பகவான் நீங்கள்தான்' என்று சொல்ல வேண்டும். அப்போதுதான் நான் நம்புவேன். தெரிகிறதா?

பகவான், மௌஜியின் கருத்துக்கு ஒப்புக் கொண்டார்.

**மௌஜி:** உங்களை முன்பின் எனக்குத் தெரியாது. நான் பிராம்மணரை இங்கே அழைத்து வருவதற்குள்ளாக நீங்கள் இங்கிருந்து தப்பி ஓடிவிட்டால் என்ன செய்வது? நீங்களோ புதிய ஆள். உங்களை நம்பி நான் தனியாக விட்டுவிட்டுப் போகமாட்டேன். (சிறிதுநேரம் ஏதோ யோசித்துவிட்டு) நான் அந்த பிராம்மணரை இங்கே அழைத்து வரும் வரையிலும், உங்களை ஆற்றங்கரை மரத்தில் கட்டிப்போட்டு விட்டுப் போகலாம் என்று நினைக்கிறேன். நீங்கள் என்ன சொல்கிறீர்கள்?

அதற்கும் பகவான் சம்மதித்தார். அதோடு மட்டுமல்லாமல் அவராகவே போய் மரத்தின் அருகில் நின்று கொண்டார்!

மௌஜி, அங்கே மேய்ந்து கொண்டிருந்த சில மாடுகளின் கழுத்திலிருந்து கயிறுகளை அவிழ்த்தான். அவைகளை ஒவ்வொன்ருக முடி போட்டு, பலமான ஒரு பெரிய கயிருகக் கட்டினன். அந்தக் கயிற்றைக்கொண்டு, பகவானை அப்படியும் இப்படியும் நகரவொட்டாமல், மரத்தோடு வைத்து நன்ருக இறுக்கிக் கட்டினன். அவர், கயிற்றை அவிழ்த்துக் கொண்டு, தான் வருவதற்குள் ஓடிவிட மாட்டார் என்பதைப் பலமாகக் கட்டியிருக்கிருேமா என்பதைக் கொண்டு ஒரு முறைக்குப் பல முறை சோதித்துப் பார்த்து நிச்சயம் செய்து கொண்டான்.

பிறகு அவன், பிராம்மணரை அழைத்து வருவதற்காக மேல்மூச்சு கீழ்மூச்சு வாங்க ஓட்டமாக ஓடினன். சுமார் அரை மைல் தூரம் ஓடிய பிறகு, பிராம்மணர் சென்று கொண்டிருந்ததைக் கண்டான்.

உடனே மௌஜி அவரைக் கூவிக்கூவி அழைத்தான்: ''சுவாமி, கொஞ்சம் நில்லுங்கள்! சுவாமி, கொஞ்சம் நில்லுங்கள்! நீங்கள் போனபிறகு பகவான் அங்கே வந்தார். அவரை நான் மரத்தோடு சேர்த்துக் கட்டிப் போட்டுவிட்டு வந்திருக்கிறேன். தாங்கள் தயவுசெய்து மரத்தடிக்கு வந்து, நீங்கள் பார்த்த பகவான் அவர்தாஞ என்பதைச் சொல்லிவிட்டுப் போய்விடுங்கள்'' என்று சொல்லிக் கத்தினன்.

மௌஜியைக் கண்டதும், மாட்டுக்காரப் பையன் தன்னை ஏன் இப்படித் துரத்திக் கொண்டு வருகிருன் என்பது பிராம்மணருக்குப் புரியவில்லை. ஒரு வேளை தன்னிடம் உள்ள துணிப் பையைப் பிடுங்கிக் கொள்வதற்காக இப்படித் தந்திரமாகக் கூவி அழைக்கிருனே என்று அவர் சந்தேகப்பட்டார்.

இந்தச் சந்தேகம் அவருக்கு வந்ததோ இல்லையோ, அடித்தோம் பிடித்தோம் என்று மேலும் வேக வேகமாக அவர் ஓட ஆரம்பித்தார்.

மௌஜி விடுபவனுக இல்லை. சளைக்காமல் தன்னுடைய வேகத்தை அதிகப்படுத்தி, அவருடைய கைகளை வளைத்துப் பிடித்துவிட்டான். பிராம்மணர் தப்பி ஓடுவதற்குத் தன்னுலான எவ்வளவோ முயற்சி செய்தார். மௌஜியின் பிடி உடும்புப் பிடியாக இருந்தது. ''கொஞ்சம் ஆற்றங்கரை வரையிலும் வந்துவிட்டுப் போய் விடுங்கள், சுவாமி!'' என்று சொல்லிக் கொண்டே, பகவான் கட்டப்பட்டிருந்த இடத்துக்கு பிராம்மணனைத் தள்ளிக்கொண்டு வந்துவிட்டான்.

**மௌஜி:** சுவாமி! மரத்தில் பகவானைக் கட்டியிருப்பதை நன்ருகப் பாருங்கள். நீங்கள் கண்களை மூடியபோது தரிசித்த பகவான் இவர்தாஞ என்பதைச் சரியாகப் பார்த்துச் சொல்லுங்கள்.

பிராம்மணரின் கண்களுக்குப் பகவான் கட்டப்பட்டிருப்பது தெரியவில்லை! மரத்தில் கயிறு கட்டப்பட்டிருப்பதை மட்டுமே அவர் பார்த்தார். மௌஜியோ, ''சரியாகப் பார்த்துச் சொல்லுங்கள், இவர்தாஞ பகவான் என்று'' என்று திரும்பத் திரும்பக் கேட்டுக் கொண்டிருந்தான்.

பிராம்மணர், சுற்றும் முற்றும் பார்த்தார். கண்களைக் கசக்கிக் கொண்டு பார்த்தார். மரத்தடியில் கயிறு கட்டப்பட்டிருந்ததைத் தவிர அவருக்கு பகவான் இருந்தது தெரியவில்லை. ஆகவே அவர், 'எங்கே இருக்கிருர் பகவான்?' என்று மௌஜியிடமே கேட்டார்.

**மௌஜி:** என்ன சுவாமி நீங்கள்? பகலி லேயே உங்களுக்குப் பசுமாடு தெரியாவிட்டால் அமாவாசை அர்த்தராத்திரியில் எருமைமாடு எப்படித் தெரியப்போகிறது? இதோ, இங்கே மரத்தடியில் பகவானைப் பலமாகக் கட்டி வைத் திருப்பதைப் பாருங்கள். இவர்தான் பகவான் என்று சொல்லிவிட்டு உங்கள் வழியைப் பார்த் துக்கொண்டு போங்கள்.

பிராம்மணரின் உள்ளத்தில், தம்முடைய துணிப்பை எங்கே பறிபோய்விடுமோ என்ற எண்ணமே சுழன்று கொண்டிருந்தது. ஆகவே, அவர் மௌஜியிடமிருந்து எப்படியாவது தப் பித்தால் போதும் என்று நினைத்து, ''ஆமாம், ஆமாம். நான் முதலில் ஏதோ ஞாபகமாக சரியாகப் பார்க்காமல் போனேன். சாட்சாத் நான் சொன்ன பகவான் இவரேதான்! இவ ரைத்தான் நீ கயிற்றைக் கொண்டு மரத்தடி யில் கட்டி வைத்திருக்கிருய்'' என்று பகவான் இருப்பதைப் பார்க்காமலேயே சொன்னுர்.

மௌஜிக்குப் பிராம்மணர் பொய் சொல் கிருர் என்பது தெரியாது. ஆகவே அவர் சொன்னதைக் கேட்டதும், அவன் மனம் திருப்தி அடைந்தது. அவன் அவருக்கு நன்றி தெரிவித்தான். அவரை அன்போடு வழி அனுப்பி வைத்தான்.

பிராம்மணர், 'பெரிய கண்டத்திலிருந்து தப்பித்தோம்' என்று தமது பிரயாணத்தைத் தொடர்ந்தார்.

## 6

பிராம்மணர் சென்ற பிறகு, மௌஜி பக வானைக் கட்டியிருந்த கயிற்றை அவிழ்த்தான். பக்தியோடு பகவானின் திருவடிகளில் சாஷ் டாங்கமாக வீழ்ந்து பணிந்தான்.

**பகவான்:** குழந்தாய் மௌஜி! நீ கொண்ட பரிபூரண நம்பிக்கைக்காகத்தான் நான் உனக் குத் தரிசனம் கொடுத்தேன். அந்தப் பிராம் மணனுக்கு உன்னைப் போல என் மீது பரிபூரண நம்பிக்கை கிடையாது. அவன் என்னுடைய பக்தன் அல்ல.

**மௌஜி:** அவரை உங்களுடைய பக்தன் இல்லையென்ரு சொல்கிறீர்கள்? அப்படியானுல் நீங்கள் ஏன் அவருக்குத் தரிசனம் கொடுத் தீர்கள்? உங்களை அவர் தியானத்தில் பார்த்த தாகச் சொன்னுரே!

**பகவான்:** நான் அந்தப் பிராம்மணனுக்கு எந்தக் காலத்திலும் தரிசனம் கொடுத்தது இல்லையப்பா! அவன் என்னைத் தியானத்தில் பார்க்கவும் இல்லை.

**மௌஜி:** நீங்கள் என்ன சொல்கிறீர்கள்? உங்களைத் தினந்தோறும் தியானத்தில் பார்ப்ப தாக அவர் சொன்னது பொய்யா? இப்போது என் கண் முன்னுலேயேகூட மரத்தில் கட்டப் பட்டிருந்த உங்களைப் பார்த்துவிட்டு 'நீங்கள் தான் பகவான்' என்று சொன்னுரே, அதைக் கூடவா பொய் என்று சொல்வீர்கள்?

**பகவான்:** ஆம். அவன் என்னைப் பார்த்த தாகச் சொன்னது அவ்வளவும் பொய். என்னை ஒருபோதும் பார்க்காமலேயே தியானத்தில் பார்த்ததாக உன்னிடம் சொன்னுன். நீ அவனை இப்போது அழைத்து வந்தபோதும்கூட, உன்னுடைய கண்களுக்கு மட்டுமே நான் தென் பட்டுக் கொண்டிருந்தேனே தவிர, அவ னுடைய கண்களுக்கு நான் தென்படவே இல்லை. உண்மை இப்படியிருக்க, நான் மரத் தில் கட்டப்பட்டிருந்ததைப் பார்த்ததாகப் பொய் சொன்னுன். அவன் சரியான ஓர் ஏமாற்றுப் பேர்வழி.

**மௌஜி:** போனது போகட்டும். அவரை நான் சந்தித்ததால்தான் உங்களுடைய தரி சனம் எனக்குக் கிடைத்தது. அவர் சொன்ன வைகளை நான் அப்படியே உண்மை என்றே நம்பினேன். அவரை ஓர் ஏமாற்றுப் பேர்வழி என்று நீங்கள் சொல்கிறீர்கள். என்ருலும் நான் அவரை என்னுடைய குருவாகவே கருது கிறேன்.

**பகவான்:** என் கண்மணி, மௌஜி! உனக்கு என்ன வேண்டுமோ கேள். என்னுடைய தரி சனத்தைப் பெற்றவர்களை வெறுங்கையோடு நான் திருப்பி அனுப்பமாட்டேன். உனக்கு என்ன வேண்டுமோ கேள் குழந்தாய்.

**மௌஜி:** பிரபோ, என் தெய்வமே! நான் நீராடி உட்கார்ந்து மூக்கைப் பிடித்துக் கண் களை மூடும்போதெல்லாம், தங்களுடைய தரி சனத்தைத் தந்தருள வேண்டும்.

**பகவான்:** அப்படியே குழந்தாய், நீ விரும் பியபடியே என்னுடைய தரிசனம் உனக்கு எப் போதும் கிடைக்கும்.

**மௌஜி:** பெருமானே, தாங்கள் அனுமதி அளித்தால் மேலும் ஒரு வரத்தை உங்களிடம் கேட்கலாம் என்று இருக்கிறேன்.

**பகவான்:** கேள். உனக்கு என்ன வேண்டுமோ தருகிறேன்.

**மௌஜி:** பரம்பொருளே! ஏமாற்றுக்காரர் என்று நீங்கள் சொன்னாலும், அந்த பிராம்மணர் இப்போது என்னுடைய குருவாகி விட்டார். அந்தப் பெரியவர் எப்போதெல்லாம் நீராடி உட்கார்ந்து மூக்கைப் பிடித்துக்கொள்கிறாரோ, அப்போதெல்லாம் அவருக்கும் நீங்கள் தங்களின் தரிசனத்தைத் தந்தருள வேண்டும். இதுவே என்னுடைய பிரார்த்தனை.

**பகவான்:** குழந்தாய், நீ உயர்ந்த உள்ளம் கொண்டவன். உலகில் சாதாரணமாக குரு தான் சம்சாரக் கடலிலிருந்து சீடனைக் கரையேற்றுவது வழக்கம். நீயோ, உன்னுடைய பிரார்த்தனையால் உனது குருவையே நற்கதி பெறச் செய்தாய். அவன் ஓர் அற்பன்; என்றாலும் நீ கேட்டுக் கொண்டதால், அவனுக்கும் நான் தரிசனம் தருகிறேன். எனது தரிசனத்தைப் பெறுவதால் அவனும் மேலான ஞான நிலையைப் பெற்று வாழ்வான்.

## 7

ஒரு வருட காலம் உருண்டோடியது. ஒரு நாள் மௌஜி, வழக்கப்படி மாடுகளை மேய்த்துக்கொண்டு ஆற்றங்கரையிலே உட்கார்ந்திருந்தான். அப்போது தன்னுடைய குருவாகிய பிராம்மணர் தூரத்தில் வந்து கொண்டிருப்பதைக் கண்டான். உடனே ஆவலோடு அவரை நோக்கி ஓடி, ''குருதேவரே, என்னுடைய நமஸ்காரங்களை ஏற்றுக் கொள்ளுங்கள்'' என்று சொன்னான்.

**பிராம்மணர்:** குருதேவரே, என்னுடைய நமஸ்காரங்களை ஏற்றுக் கொள்ளுங்கள்! குருதேவரே, என்னுடைய நமஸ்காரங்களை ஏற்றுக் கொள்ளுங்கள்!

**மௌஜி:** உங்களால்தான் எனக்குப் பகவானின் தரிசனம் கிடைத்தது.

**பிராம்மணர்:** இல்லை, இல்லை. உங்களால்தான் எனக்குப் பகவானின் தரிசனம் கிடைத்தது.

**மௌஜி:** நான் மாடு மேய்க்கும் பையன். தாங்களோ புத்திமானாகிய பிராம்மண பண்டிதர்.

**பிராம்மணர்:** இல்லை, இல்லை. நான்தான் மாடு மேய்க்கும் பையன். தாங்கள்தான் புத்திமானாகிய பிராம்மண பண்டிதர்.

**மௌஜி:** நான் ஒரு முட்டாள். உங்களுடைய அருளால்தான் உலகில் எப்படி வாழ வேண்டும் என்பதையே தெரிந்து கொண்டேன்

**பிராம்மணர்:** நான் ஓர் ஏமாற்றுப் பேர் வழி. உண்மையாகவே கடவுளை நம்பாதவன். உங்களுடைய அருளால்தான் எனக்கு உண்மையான கடவுள் நம்பிக்கையும் பக்தியும் ஏற்பட்டன.

**மௌஜி:** கடந்த காலம் எப்படியோ போனது போகட்டும். நீங்கள் இப்போது எனக்குக் குருவாகவும் சீடராகவும் ஆகிவிட்டீர்கள். நானும் உங்களுக்குச் சீடராகவும் குருவாகவும் ஆகிவிட்டேன்.

**பிராம்மணர்:** நீங்கள் ஒன்று செய்யுங்கள். இப்போது முதல் உங்களுடைய இந்த மாடு மேய்க்கும் தொழிலை விட்டு விடுங்கள். நானும் இந்தப் போலி பிராம்மண பண்டிதர் உத்தியோகத்திற்கு ஒரு முழுக்குப் போட்டுவிடுகிறேன். பிறகு ஊர்ஊராகச் சென்று பகவானின் புகழைப் பாடுவோம். அதன் மூலம் நாமும் உண்மைப் பக்தியில் திளைப்போம். உலக மக்களையும் உண்மைப் பக்தியில் திளைக்கச் செய்வோம்.

பிராம்மணரும் மௌஜியும் அப்போதுமுதல் சன்னியாச வாழ்க்கையை ஏற்றுக் கொண்டார்கள். பிராம்மணர் தனக்கு 'இடையர் தாசர்' என்ற புதிய பெயரை வைத்துக் கொண்டார். மௌஜிக்கு அவர் 'பண்டிதர் தாசர்' என்ற பெயரை வைத்தார்.

## 8

இருவரும் ஊர் ஊராகச் சென்றார்கள். இடையர்தாசர் கைகளால் தாளம் போட்டுக் கொண்டே பக்திப் பாடல்களைப் பாடினர். அவரோடு சேர்ந்து பண்டிதர்தாசரும் தம்புராவை மீட்டிக்கொண்டே பாடினர்.

அந்த இரண்டு மகான்களையும்தான் கதையின் ஆரம்பத்தில் நாம் சந்தித்தோம் என்பதை, இனியும் வாசகர்களுக்கு விளக்க வேண்டிய அவசியம் இல்லையே!



வேதவாக்கு :

# பரம்பொருளின் பாவனைகள்

தமிழாக்கம் : 'அண்ணா' சுப்ரமண்யம்

## நிராகார-நிர்க்குண பிரம்மம்

ஆதியில் ஸத்தும் இருக்கவில்லை, அஸத்தும் இருக்கவில்லை; காற்றும் இருக்கவில்லை, அதற்கப்பாலுள்ள ஆகாயமும் இருக்கவில்லை... சாவும் இருக்கவில்லை, சாகாமையும் இருக்கவில்லை; இரவின் அடையாளமோ பகலின் அடையாளமோ எதுவும் இருக்கவில்லை. காற்று இல்லாமல் தன்னுடைய சக்தியால் ஒன்று மூச்சுவிட்டுக் கொண்டிருந்தது. அதனின்று புறம்பாக வேறு எதுவும் இருக்கவில்லை.

அங்கு இருளை இருள் கவ்விக் கொண்டிருந்தது; இது எல்லாம் விளங்காத ஒரு குழப்பமாக இருந்தது. சூனியத்தில் மறைந்திருந்த ஒன்று அப்பொழுது தவத்தின் (ஞான சக்தியின்) ஒளியால் வெளிப்பட்டது.

—ரிக்—129.1—3.

அந்த ஒன்றுதான் அசையும் பொருள்களையும் அசையாப் பொருள்களையும், நடக்கும் உயிர்களையும் பறக்கும் உயிர்களையும், பல வகைப்பட்ட சிருஷ்டி அனைத்தையும் ஆளும் இறைவன்.

—ரிக்—3.54.8.

'தத் ஸத்' என்னும் அந்தத் தத்துவத்தை அன்பு நிறைந்த முனிவன் காண்கிறான். அது இதய குகையில் மறைந்துள்ளது. அது உலகம் முழுவதும் ஒடுங்கும் ஒரு கூண்டுபோல் உள்ளது. அதில் இது எல்லாம் ஒன்றுபடுகிறது. அதிலிருந்தே வெளிப்படுகிறது. எங்கும் நிறைந்த அந்த ஒன்றே உயிர்களிடையே ஊடும் பாவும் போல் பரவி நிற்கின்றது.

—யஜுர்—40.1 (மஹாநாராயண உப—1.14)

ஒன்றேயாகிய பரம்பொருளின் வெவ்வேறு தோற்றங்களே தேவர்கள் என்னும் சகுண ஜோதியின் வடிவங்கள்.

ஆதி உஷத் காலத்தில் 'மஹத் அஹங்காரம்' ஒளி வடிவில் வெளிப்பட்டது. தேவர்களின் கட்டளைகளை இனிப் போற்றுவோம். தேவர்களுக்கும் தேவனான அந்த ஒருவனுடைய பெருமை பெரிதினும் பெரிது.

—ரிக் 3.55.1

இந்திரன், மித்ரன், வருணன், அக்னி என்று பேசுகின்றனர்.... ஒரே பரம்பொருளை முனிவர்கள் அக்னி, யமன், மாதரிச்வா என்ற பல பெயர்களால் அழைக்கிறார்கள்.

—ரிக் .1.164.46; அத. 9.10.28.

அதுவே அக்னி, அதுவே வாயு, அதுவே சூரியன், அதுவே சந்த்ரமா, அதுவே அழியாத ஜோதி, அதுவே பிரம்மம், அதுவே அப்பு, அதுவே பிரஜாபதி.

—யஜுர்—வாஜஸநேயி 32.1.
—மஹாநாராயண உப. 1.

உலகிற்கு எது ஆதாரமோ அதைப்பற்றி உபதேசியுங்கள். அக்னியும் சந்திரனும் சூரியனும் வாயுவும் எங்கே நிலை பெறுகிறார்கள்?... ஒருவனேயாகிய அவனிடம்தான் முப்பத்து மூன்று தேவர்களும் தங்களை உறுப்புக்களாகச் செய்து கொண்டு வசித்தார்கள். அந்த பிரம்மத்தை அறிந்தவர்கள் எவர்களோ, அவர்கள் தான் முப்பத்து மூன்று தேவர்களையும் அறிந்தவராவர். —அத. 10.5.12.27.

மந்திரத்தில் கூறிய அக்ஷரத்தில் தேவர்கள் எல்லாம் வாழும் உத்தம சுவர்க்கம் உள்ளது. அதை அறியாதவன் ரிக் மந்திரத்தால் என்ன செய்யப் போகிறான்? அதை அறிந்தவர்களே பரிபூரணமானவர்கள். —ரிக் 1.164.39.

—அத 9.10.18.

அவனை (இந்திரனை) போற்றுங்கள். அந்த ஒருவனே உண்மையில் மனித சமூகங்களின் பிரபுவாகவும், செயல் திறன் படைத்தவனாகவும், வீரியம் மிக்கவனாகவும் தோன்றியவன்.

—ரிக் 6.45.16.

ஒவ்வொரு தோற்றத்திற்கும் அவனே முன் மாதிரியாக உள்ளவன். அவனுடைய வடிவம் தான் எங்கும் காணப்படுகிறது. இந்திரன் எனப்பட்ட அவனே தன்னுடைய மாயாசக்தியால் பல வடிவுகளில் உலவுகிறான். (பரம்பொருளே இந்திரன் என்று இங்கு குறிக்கப்படுகிறது.) —ரிக் 6.47.18.; ப்ரு.உப.2.5.19.

—சாம 17.10; அத. 6.36.3.



# இறை வழிபாடு

### திருமுருக கிருபானந்தவாரியார்

(சென்ற இதழின் தொடர்ச்சி)

நம்மில் பலருக்கும் இறைவனை ஏன் வணங்க வேண்டும்? வணங்காவிடில் என்ன? மனித வாழ்வில் இறையுணர்ச்சி இல்லாமல் வாழ முடியாதா? நாம் வணங்காவிடில் கடவுளுக்கு என்ன நஷ்டம்? என்ற வினுக்கள் உள்ளுணர்வில் எழுவது இயல்பு. இவைகளுக்கு விடை காண முயல்வது முறை.

விலங்குகளும் உண்ணுகின்றன; உலாவுகின்றன; வம்சத்தை வளர்க்கின்றன. மனிதர்களாகிய நாமும் உண்ணுகிறோம்; உறங்குகிறோம்; உலாவுகிறோம்; மக்களைப் பெறுகிறோம். இவை விலங்குகட்கும், மனிதர்கட்கும் ஒன்றாகவே அமைந்திருக்கின்றன. விலங்குகளினின்றும் மனிதன் உயர்ந்து காட்சியளிப்பது தெய்வ உணர்ச்சி ஒன்றாலேயேதான்.

ஒரு கானகத்தில் விலங்குகளின் மாநில மாநாடு கூடியது. அதில் தலைமை தாங்கிய சிங்கம், ''விலங்குத் தோழர்களே! உயிர் வாழ்க்கைக்கு ஆடை அவசியமா? மனிதர்கள், ஆடைக்கு அவசியமின்றி அதிகம் செலவழிப்பது அறிவின்மையாகும். அது வருந்தத்தக்கது; கண்டிக்கத்தக்கது'' என்று கூறியது. இதுபோல் மனித வாழ்க்கைக்குக் கடவுள் வணக்கம் தேவையா? நாங்கள் கடவுளை வணங்காமல் வாழவில்லையா? என்று வினவுவார்கள். மானம் உள்ளவன் ஆடை உடுப்பான். மனம் உள்ளவன் இறைவனை வணங்குவான்.

மனிதன் செய்கின்ற பாவங்களுக்கெல்லாம் கழுவாய் உண்டு. நன்றி கொன்ற பாவத்திற்கு மட்டும் கழுவாய் இல்லை.

''எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம்; உய்வில்லை
செய்நன்றி கொன்ற மகற்கு''

—திருக்குறள்.

எனவே, கழுவாய் இல்லாத பாவம் நன்றி கோறல் ஆகும். இதற்கு நேர் மறுதலையாகச் சிறந்த புண்ணியம் நன்றி மறவாமையாகும். இந்த உடம்பையும், உடம்பின் உறுப்புக்களையும், உள்ளுறை கருவி கரணங்களையும் தந்தவன் இறைவன். கண்ணைக் கொடுத்த இறைவன், கண் தூசுபட்டு மங்காமல் இருக்கும் பொருட்டு கண்ணிற்குக் கதவு போல இமையும் கொடுத்தான். அந்த இமையின் நுனியில் உரோமங்களையும் அமைத்தான். உணவு உண்ணுகின்ற வாயில் உணவைத் துகள்படுத்த (Flour Mill) பற்களையும் கொடுத்தான். வாய்க்குள் நுழைகின்ற பொருள் நல்லனவா? அல்லனவா? என்று சோதித்து உள்ளே அனுப்ப வாய்க்கு நேராக



இரண்டு காவற்காரர்களைப்போல் இரு நாசிகளை அமைத்தார். உண்ணுகின்ற உணவைப் பல் மெல்லவும், நாவில் ஊறவும் அமைத்தார். நம்முடைய உடம்பில் எல்லா அவயங்களிலும் நரம்புகள் உள. நாவில் மட்டும் நரம்புகள் இல. ஏனோ?

நரம்புள்ள பகுதிகள் சுளுக்கிக் கொள்ளும். நாவில் நரம்பு வைத்திருந்தால் ஒரு நாளுக்கு நூறு முறையாவது சுளுக்கிக் கொள்ளும். விளக்கெண்ணெய் தடவி உருவ வேண்டி வரும். இறைவன் கருணையினால் இடையறாது பேசுகின்ற நாவை நரம்பின்றிப் படைத்துக் கொடுத்தான். அவன் கொடுத்த நாவினால் அவனுடைய நாமங்களைச் சொல்லுதல் நன்றி பாராட்டுதலாகும். அவன் கொடுத்த தலையினால் அப் பரமபிதாவை வணங்குதல் நன்றிக் கடனாகும். வடமொழியில் காலையும் மாலையும் கடவுளை வணங்குவதை சந்தியாவந்தனம் என்பார்கள்.- சம் = செவ்வையாக, தியா = தியானித்து, வந்தனம் = வணங்குவது, சந்தியா வந்தனமாகும். இந்த சொல்லைப் பார்க்கினும் ஒரு கோடி மடங்கு பொருளாழம் உள்ளதாகக் கடவுளை வணங்குவதற்குக் காலைக்கடன், மாலைக்கடன் என்று தமிழில் ஆன்றோர் கூறினர். கொடுத்த கடனைத் திருப்பிக் கொடாதது

எத்துணைப் பெரிய பாபமாகுமோ, அத்துணைப் பெரிய பாபமாகும் இறைவனை வணங்காதிருத்தல். ''என் கடன் பணிசெய்து கிடப்பதே'' என்று அப்பர் பெருமான் குறிப்பிடுகிறார்.

கருணையே வடிவாகிய இறைவன், உயிர்களின் மீதுள்ள இரக்கத்தினால் இந்த உடம்பை வழங்கினான் என்பதை முன்னர் அறிந்தோம். அவன் தந்த உடம்பினால் அவனை வழிபடுவது கடமையாகும். இன்றேல் கடமையை மறந்த மடமையாகும். காவிரியில் ஒருவன் நீராடுவது காவிரிக்கு நன்மை விளையும் பொருட்டன்று. தன் உடம்பிலுள்ள வெப்பம் தணியும் பொருட்டுக் காவிரியில் நீராடுகிறான். அதுபோல் அருட் கடலாயிருக்கிற ஆண்டவனை வழிபட்டால் நம்முடைய பிறவி வெப்பம் தணிகிறது.

அப்பர் பெருமான் இறைவன் நமக்குத் தலை முதலிய கருவிகளைத் தந்தான் என்று தெரிவித்து விட்டு, அக்கருவிகளை நோக்கி இறை வழிபாடு செய்யுங்கள் என்றும் அருளிச் செய்கிறார்.

வாழ்த்த வாயும் நினைக்க மட நெஞ்சும்
தாழ்த்தச் சென்னியும் தந்த தலைவனை
சூழ்த்த மாமலர் தூவித் துதியாதே
வீழ்த்தவா வினையேன் நெடுங்காலமே
''தலையே நீ வணங்காய்—தலைமாலை தலைக்
கணிந்து
தலையாலே பலி தேரும் தலைவனைத்
தலையே நீ வணங்காய்''

உடம்பின் பயன் இறைவனை வணங்குவதாகும். அறிவின் பயன் இறைவனை அறிவதாகும். கல்வியின் பயன் கடவுளைத் தொழுவதாகும்.

கற்றதனா லாய பயன்என்கொல் வாலறிவன்
நற்றாள் தொழாஅர் எனின்''
—திருவள்ளுவர்.

சென்றது காலம் சிதைந்த(து) இளமை நலம்
நின்றதுசா வென்று நினைந்துருகி—மன்றில்
நடிக்கின்ற பால்வண்ணர் நாமமெண்ணா
மாந்தர்
படிக்கின்ற நூல்எல்லாம் பாழ்.
—அதிவீரராம பாண்டியர்.

இறைவனுடைய திருவடியில் அன்பில்லாதவர் கல்வியின் பெருக்காலும், குலத்தின் முறுக்காலும் நன்மையடைய மாட்டார்.

கற்றதனாற் றொல்வினைக் கட்டறுமோ
நல்லகுலம்
பெற்றதனாற் போமோ பிறவிநோய்
உற்றகடல்
நஞ்சுகந்து கொண்டருணை நாதனடித்
தாமரையை
நெஞ்சுகந்து கொள்ளா நெறி.
—அருணகிரியந்தாதி

ஆதலால், மனிதப் பிறப்புக்கு இறைவழிபாடு இன்றியமையாதது என உணர்க. ஒரு மாவட்டத்திற்கும், மற்றொரு மாவட்டத்திற்கும் அரசாங்கத்தார் ஓர் எல்லைக்கல் அமைத்திருப்பது போல, விலங்குகட்கும் மனிதனுக்கும் இடையில் இட்ட எல்லைக்கல் இறைவழிபாடாகும். இறைவழிபாடு இல்லாத மனிதன் விலங்கெனவும், இறைவழிபாடு செய்கின்ற விலங்கு தேவன் எனவும் உணர்க.

திருச்சிராப்பள்ளிக்கு அருகில் எறும்பு வழிபட்ட திருவெறும்பூரும், யானை வழிபட்ட திருவானைக்காவும் காட்சி தருகின்றன. எறும்பு முதல் யானை ஈறாக எல்லாவுயிர்களும் இறைவனை வழிபட வேண்டும் என்பதும் போதருகின்றது.

எறும்பு கடை யானைதலை ஈசனைப் பூத்துப்
பெறுங்கதிகண் டுந்தேறார் பேய்கள்—அறிந்த
உலகத்தா ருண்டென்ப தில்லென்பான்
வையத்
தலகையாய் வைக்கப் படும்.
—முதுமொழி மேல்வைப்பு.

### வழிபடும் முறை

கோயிலில் வழிபடுவோர் நீராடி, தூய ஆடை அணிந்து, சமயச் சின்னங்கள் தரித்து, அன்புடனும் ஆசாரமுடனும் கோயிலுக்குச் செல்ல வேண்டும்.

கொடி மரத்திற்கு வெளியே விழுந்து வணங்க வேண்டும். உள் பிரகாரங்களில் விழுந்து வணங்குதல் குற்றம்.

விநாயகரை ஒரு முறையும், சிவமூர்த்தியை மூன்று முறையும், அம்பிகையை நான்கு முறையும் வலம் வருதல் வேண்டும்.

கோயிலில் ஒருமைப்பட்ட மனதுடன் வழிபாடு செய்ய வேண்டும். கோயிலில் வழிபடுவோர் வீண் வார்த்தைகள் பேசுவதும், எச்சில் துப்புதலும், பிற தீமைகள் செய்வதும் கூடாது.

அர்ச்சகர் தரும் விபூதி பிரசாதங்களைப் பய பக்தியுடன் இரு கரங்களாலும் ஏந்திப் பெறுதல் வேண்டும். பெற்ற பிரசாதத்தைக் கீழே சிந்துவதும் ஒரு புறத்தில் எறிவதும் பெரும் பாவமாகும். சண்டேசுவரர் மீது நூல் இடுவதும், சிவலிங்கத்திற்கும், நந்தி தேவருக்கும் இடையே போவதும் குற்றமாகும்.

கோயிலில் பிரசாதங்களை உண்டு, கோயில் தூண்களில் துடைப்பது அனுசிதமாகும். கோயிலில் படுத்து உறங்குவோர் மறு பிறப்பில் மலைப்பாம்பாகப் பிறப்பார்கள். வழிபாடு முடிந்தபின் கொடிமரத்தின் அருகிலிருந்து வடதிசை நோக்கி அமர்ந்து மூல மந்திரம் ஜபிக்க வேண்டும். நன்கு இனிமையாகத் தோத்திரப் பாடல்களை அதிக சப்தம் போடாமல் இனிய குரலில் துதிக்க வேண்டும். கோயில் விளக்குகளில் எண்ணெய் இடுதல் வேண்டும்.

''விளக்கிட்டார் பேறுசொல்லில் மெய்ந்
நெறி ஞானமாகும்''
—அப்பர்

கோயிலில் அணைகின்ற விளக்கை அபுத்தி பூர்வமாகத் தூண்டிய எலி பலிச் சக்கரவர்த்தியாகப் பிறந்து புகழ் பெற்றது.

நீளுகின்ற நெய்யருந்த நேரெலியை
மூவுலகும்
ஆளுகின்ற மன்னவனாய் ஆக்கினையே''
—திருவருட்பா.

### வீட்டு வழிபாடு

இனி நாள்தோறும் குடும்பத்தில் உள்ளோர் அனைவரும் ஒன்றுகூடிக் காலை அல்லது மாலையில் வழிபட வேண்டும். வீட்டுத் தலைவன் ஒரு பாடலைச் சொல்ல, ஏனையோர் அதனை வழிமொழிந்து சொல்ல இறைவனை பக்தியுடன் வழிபாடு செய்ய வேண்டும். இதனால் குடும்பத்தில் ஒற்றுமை உண்டாவதுடன் அந்த வீட்டில் தெய்வ கடாக்ஷமும் திருமகள் விலாசமும் உண்டாகும்.

### கூட்டு வழிபாடு

ஒரு தனி இழையை எளிதில் அறுத்து விடலாம். பல இழைகள் ஒன்றுபட்டுத் திரித்த கயிறு (வடம்) தேரை இழுத்து விடும். அது போல, பல அன்பர்கள் வாரத்திற்கு ஒரு நாள் கோயிலில் ஒன்றுபட்டுக் கூட்டு வழிபாடு செய்தால் திருவருளை ஈர்த்துவிடலாம். முஸ்லீம் அன்பர் தினம் ஒன்றுக்கு ஐந்துவேளை தவறுமல் தொழுவதும், கிறிஸ்தவ அன்பர்கள் ஞாயிறு தோறும் தங்கள் தேவாலயத்திற்குச் சென்று நியதியாகத் தொழுவதும்போல், இந்துக்களாகிய நாமும் குறிப்பிட்ட நாட்களில் ஆங்காங்குள்ள ஆலயங்களில் நியதியாக வழிபடுவது மிக மிக அவசியமாகும். அண்ணல் காந்தியடிகள் இறுதியாகப் பிரார்த்தனைக் கூட்டம் நாள் தோறும் நடத்தி, முடிவில் பிரார்த்தனைக் கூட்டத்திலேயே ஆத்ம சாந்தியடைந்தார். ஆதலால், அன்பர்கள், காதலாகிக் கசிந்து கடவுளை வழிபட்டு இகபர நலன்களை எளிதில் பெறுதல் வேண்டும். இறைவழிபாடு செய்து பிறவிப்பிணியை ஒழித்துப் பேரின்பப் பெருவாழ்வுவைப் பெறுவார்களாக.



இகழ்பவனிடம் அன்பு செய்; உனக்கு அறிவு கூடும். புகழ்பவனிடம் அன்பு செய்யாதே; உன்னுடைய அறிவு குறையும்.
**—எபிரேய மதம்**

செருக்குற்ற செல்வச் சீமான்களை வாழ்த்திப் போற்றி வழிபடுவதைக் காட்டிலும், இறைவனைக் கைகூப்பி வணங்குவது நன்மை பயக்கும்.
**—வடலூர் வள்ளலார்**

இந்த உடலை ஒம்பி வளர்க்கும் பொருட்டு, இறைவனை மறந்து வாழ்வது இன்பம் பயக்காது. இறைவனை நினைத்து நினைத்து நெஞ்சம் குழைய வேண்டும். அப்போதுதான் நற்கதி கிட்டும்.
**—வள்ளலார்**

சுகத்திலோ துக்கத்திலோ, விருப்பிலோ வெறுப்பிலோ, நம்மைப் போலவே எல்லா ஜீவன்களையும் கருத வேண்டும். எனவே நமக்கு இழைக்கப்படும்போது விரும்பத்தகாததாகத் தோன்றக்கூடிய இன்னல் எதையும் மற்றவர்களுக்கு நாம் இழைக்காமல் இருப்போமாக.
**—யோக சாஸ்திரம்**

சிறந்த குறிக்கோள்கள் நட்சத்திரங்கள் போன்றவை. உன்னல் அவைகளை எட்டிப் பிடித்து வெற்றி பெறமுடியாது. ஆனல், கடலில் பயணம் செய்ய விரும்புபவனுக்கு அலைகடலின் நடுவே வழிகாட்டியாக விளங்கும் நட்சத்திரங்களைப் போல, உனது லட்சியங்கள் உனக்கு உதவும். உன்னைப் பத்திரமான இடத்திற்குக் கொண்டு சேர்க்கும்.
**—கார்ல் ஸர்ஷ**

# அருளுக்கு ஏங்குதல்

வாகீசகலாநிதி கி.வா. ஜகந்நாதன்

பொருள் மிகுதியாகப் படைத்தவர்கள் தம்மிடம் உள்ளவற்றைக் கொண்டு திருப்தி அடைவதில்லை; மேலும் மேலும் பொருளை ஈட்ட வேண்டும் என்றே விரும்புவார்கள். அந்தத் துறையில் முயன்று கொண்டே இருப்பார்கள். தம்மைவிட மிகுதியான பொருளுடையவர்களைப் பார்த்து, ''அந்த அளவுக்கு நாம் பொருளைப் பெறவில்லையே!'' என்று அங்கலாய்ப்பார்கள்.

இறைவனுடைய திருவருளைப் பெற்றவர்களும் ஒருவகையில் இப்படித்தான் இருப்பார்கள். ''இன்னும் இறைவனுடைய அருள் தக்க வண்ணம் கிடைக்கவில்லையே!'' என்று ஏங்குவார்கள். நாம் அவர்களைப் பார்த்து, ''இவர்கள் எவ்வளவு அருளாளர்கள்!'' என்று வியப்போம். அவர்களோ, ''இறைவனே, இன்னும் உன் திருவருளை நான் பெறாமல் வாணாளை வீணாகக் கழிக்கிறேனே!'' என்று நைந்து உருகுவார்கள். அம்பிகையின் திவ்ய தரிசனத்தைக் காண வேண்டும் என்ற தீவிரமான ஆவலைக் கொண்ட இராமகிருஷ்ண பரமஹம்ஸர், ஒவ்வொரு நாளும், ''இன்றும் உன் தரிசனம் கிடைக்காமல் வீணாய்ப் போய்விட்டதே!'' என்று புலம்பினர். இவ்வாறு ஏங்கும் ஏக்கந்தான் உண்மையான பக்தியின் இலக்கணம். அவ்வாறு ஏங்கி நிற்பவர்களுக்கு இறைவன் திருவருள் அநுபவம் கிடைக்கும்.

''இனிது சாலவும் ஏசற்ற வர்கட்கே'' என்று அப்பர் பாடுவார்.

நம்மைப் போன்றவர்கள், கோவிலுக்குப் போய் ஓர் அர்ச்சனை செய்வதோடு திருப்தி அடைகிறோம். வீட்டிலே பூஜை செய்வதில் திருப்தி அடைகிறோம். ''இன்று சகஸ்ர நாம அர்ச்சனை பண்ணினேன்'' என்று பெருமை பேசுகிறோம். பல தலங்களுக்குப் போய் வந்ததைப் பெருமையாக எடுத்துச் சொல்கிறோம். ''அந்த ஞானியைத் தரிசித்தேன்; இந்தச் சுவாமிகளைத் தரிசித்தேன். அங்கே உள்ள சாதுவைப் பார்த்து நெடு நேரம் பேசிக் கொண்டிருந்தேன். ஆசாரிய சுவாமிகள், செளக்கியமாக இரு என்று சொன்னார்கள்; அந்த மகா பாக்கியம் எனக்குக் கிடைத்திருக்கிறது'' என்று சொல்லிச் சொல்லி மகிழ்ச்சி அடைகிறோம்.

ஆயிரம் ஹோட்டல்களின் விலாசத்தைத் தெரிந்து வைத்துக் கொண்டால் வயிறு நிரம்புமா? சாப்பிட்டால்தானே பசி போகும்? பெரியவர்களுடைய தரிசனமும் சாதுக்களுடைய சங்கமும் முடிந்த முடிவு அல்ல. அவைகள் எல்லாம் நமக்கு இறைவன் அருளைப் பெற வேண்டும் என்ற பசி உண்டாகக் காரணமாகும். அதற்கு மேல் நாமே முயன்று சாதனம் செய்தாலன்றி இறைவனுடைய அருளனுபவம் உண்டாகாது. குருநாதர்கள் வழிகாட்டுவார்கள். அவர்கள் காட்டிய வழியைப் பின்பற்றிச் சாதனத்திலே ஈடுபட்டு மேலே மேலே போக வேண்டும். படிப்படியாக அநுபவத்திலே உயர வேண்டும்.

'பள்ளிக்கூடத்தில் படிப்பவர்கள் படிப்படியாகப் பல வகுப்புக்களைத் தாண்டி மேற்படிப்புப் படிப்பது போல, இறைவன் திருவருளைப் பெறும் முயற்சிகளிலும் பல படிகள் உண்டு. அவற்றைத் தாண்டி மேலே போகவேண்டும். இடையிலே நின்று விடக்கூடாது. நாம் இதுவரையில் ஏறிவந்த படிகளைப் பார்த்துத் திருப்தி அடையக் கூடாது. இனிமேல் ஏற வேண்டிய படிகளைப் பார்த்து ஏங்க வேண்டும்; அவற்றைக் கடக்க முயல வேண்டும்.

பக்தர்களும், ஞானிகளும் முடிந்த முடிபாகிய சகஜ சமாதி வரும் வரையில் படியில் ஏறிக்கொண்டே இருப்பார்கள். ''இன்னும் பல படிகள் கடக்க வேண்டுமே! இறைவா, அதற்கு வேண்டிய பலத்தைத் தா!'' என்று இறைஞ்சுவார்கள். இத்தனை தூரம் ஏறும்படி அருள் செய்வதற்காக நன்றி பாராட்டினாலும், இன்னும் முற்றவும் ஏறி முடிக்கவில்லையே என்ற ஏக்கத்தைப் பெரியவர்கள் புலப்படுத்துவார்கள். அருளாளர்களின் பாடல்களில் அத்தகைய ஏக்கத்தைப் பல இடங்களில் பார்க்கலாம்.

''களக்கம்அறப் பொதுநடம்நான்
கண்டுகொண்ட தருணம்
கடைச்சிறியேன் உளம்பூத்துக்
காய்த்தது ஒரு காய்தான்,

விளக்கமுறப் பழுத்திடுமோ!
வெம்பிஉதிர்ந் திடுமோ!
வெம்பாது பழுக்கினும் என்
கரத்தில்அகப் படுமோ?
கொளக்கருது மலமாயைக்
குரங்குகவர்ந் திடுமோ!
குரங்குகவ ராதெனது
குறிப்பால்அகப் படினும்
துளக்கம்அற உண்ணுவனே?
தொண்டைவிக்கிக் கொளுமோ?
சோதிதிரு வுளம்எதுவோ?
ஏதும்அறிந் திலனே!''

என்ற இராமலிங்க வள்ளலார் பாட்டில் இந்த ஏக்கத்தைத் தெளிவாகக் காணலாம். மாணிக்க வாசகர் முதலியோருடைய திருவாக்குகளிலும் இப்படி வேசறும் நிலையை காட்டும் பாடல்கள் பலப்பல.

காரைக்காலம்மையாரும் பல இடங்களில் தம்முடைய ஏக்கத்தை வெளிப்படுத்துகிறார். ''ஆண்டவனே, ஏன் இன்னும் எனக்கு அருளாமல் இருக்கிறாய்?'' என்று மனம் கரைந்து கேட்கிறார். அப்படி உள்ள பாடல் ஒன்றை இப்போது பார்க்கலாம்.

ஆண்டவன் அனந்த கல்யாண குணங்களை உடையவன். அவனுடைய சிறப்புக்கள் பக்தர்கள் உள்ளத்தை உருக்குவன. அவனுடைய சீரை நினைப்பதனால் உள்ளம் இனிக்கிறது; பேசுவதனால் வாய் இனிக்கிறது. நினைக்க நினைக்க மனத்துக்கு இனியனவாக உள்ள சீர்கள் அவை.

**"மனக்கு இனிய சீராளன்"**

அவனுடைய இனிக்கும் சீர்கள் எத்தனையோ? அவன் கருணைக்கு எத்தனையோ சான்றுகளைக் கூறலாம். பகீரதன் செய்த தவத்துக்குப் பயன் கிடைக்கவில்லை. கங்கையே மனம் இரங்கவில்லை. இறைவன் மனம் இரங்கி, ஆரவாரித்து வந்த கங்கையைத் தன் சடையிலே தாங்கிப் பகீரதனுடைய வேண்டுகோளை நிறைவேற்றினான். அந்தக் கங்கையைத் தலையிலே தாங்கி நிற்கிறான். அகங்காரத்தால் கலக்கம் அடைந்து புனிதம் இழந்த கங்கை இறைவன் திருமுடியில் தேங்கித் தெளிந்து புனிதம் பெற்றது. கங்கைக்கு, இறைவன் மணவாளன் என்று உலகம் பேசுகிறது. உமாதேவிக்குச் சமானமான நிலையைக் கங்கை பெற்றது. உமாதேவியைக்கூட ஒரு பாகத்தில்தான் வைத்தான். கங்கையையோ தலையின்மேல் வைத்திருக்கிறான். அவன் ஈரமுடையவன்; ஈரம் அருளைக் காட்டுவது. கங்கை மணவாளன் என்பது அவன் பேரருளாளன் என்பதைக் காட்டும் அறிகுறி.

**கங்கை மணவாளன்**

அவன் திருமேனி செம்மையானது. செம்மை என்பது நிறைவுக்கும் நேர்மைக்கும், மங்கலத்துக்கும் உயிரோட்டத்துக்கும், அழகுக்கும் அடையாளமாக உள்ள வண்மை. இறைவன் இவற்றையெல்லாம் உடையவன்.

''சிவனெனும் பெயர் தனக்கே உடைய செம்
மேனியம்மன்''

என்று அப்பர் பாடுவார்.

கொடுக்கக் கொடுக்கக் குறையாத நிறைவை உடையவன் அவன். இத்தகைய நிலை வேறு யாருக்கும் இல்லை. மனிதர்களுக்கு வேண்டிய வரங்களைத் தருகிறவர்கள் தேவர்கள். அவர்களை வழிபட்டுப் பலபல நன்மைகளை அன்பர்கள் பெறுகிறார்கள், ஆனாலும் சிவபெருமான் வழங்கும் அளவுக்கு அவர்களால் அருள் செய்ய முடியாது. அதனால்தான் அவர்கள் தமக்கு இறைவனையே தலைவனாகப் போற்றி வழிபடுவார்கள். சிறிய ஆற்றலையுடைய மக்கள் தம்மை வழிபடும்போது அவர்களுடைய குறையைப் போக்கியருளும் பேராற்றல் அந்தத் தேவர்களுக்கு உண்டு. அதனால் அவர்கள் குறை இல்லாதவர்கள் என்று எண்ணக் கூடாது. அவர்களும் குறையை உடையவர்களே! தம்முடைய குறைகளை நீக்கிக் கொள்ள அவர்கள் சிவபெருமானை வாழ்த்துகிறார்கள்; வணங்குகிறார்கள். அப்படி வணங்கியதனால் பிறர் தம்மை வணங்கும் பதவியைப் பெற்றார்கள்.

''வாழ்த்துவதும் வானவர்கள்
தாம்வாழ்வான்; மனம்நின்பால்
தாழ்த்துவதும் தாம்உயர்ந்து
தம்மை எல்லாம் தொழவேண்டி''

என்ற திருவாசகம் இந்தக் கருத்தைப் புலப்படுத்துகிறது. சிவபெருமானுக்கு மகாதேவன், தேவதேவன் என்ற திருநாமங்கள் உண்டு. அவன் தேவர்களுக்கெல்லாம் வேண்டியதை உதவும் உபகாரி.

**செம்மேனிப்**
**பேராளன், வானோர் பிரான்**

என்று இந்த இயல்புகளையெல்லாம் உள்ளடக்கிப் பாடுகிறார், காரைக்கால் அம்மையார்.

அத்தகைய இறைவனை அடைந்தால் தமக்கு வேறு எங்கும் கிடைக்காத அருள் கிடைக்கும் என்று அவனை அடைந்தவர் அம்மையார். வேறு யாரையும் அணுகாமல் சிவபெருமானுக்கே அடிமைப்பட்டவர். அவனையே அடைந்து வாழ்பவர். 'இந்த வாழ்வு இறைவனுக்கு ஆட்படுவதற்காகவே அமைந்தது' என்பதை உணர்ந்து அனன்ய பக்தி செய்தவர். அவருடைய வாழ்வு, அவனை அடைந்த பிறகே உண்மையான வாழ்வாயிற்று. அடைய வேண்டிய இடத்தை அடைந்து விட்டோம் என்ற மன நிறைவு அவருக்கு ஏற்பட்டது.

இறைவன் பெருமைகளையெல்லாம் உணர்ந்தார். அவன் கல்யாண குணங்களையும், அவற்றுக்குள் சிறந்து நிற்கும் கருணையையும், அவன் குறைவிலா நிறைவுடையவன் என்பதையும், பதவி பெற்றார் எல்லோரும் அவனுடைய அருளால் பிழைக்கிறார்கள் என்பதையும் உணர்ந்தார். அவனையன்றிப் புகலிடம் வேறு இல்லை என்று தெளிந்தார். அவன் அடிக்கே ஆளானார். அதன்பின் அவருடைய வாழ்வு வாழ்வாயிற்று. இப்போது அவர் வாழ்கிறார்.

**தனக்கே அடியனாய்த்**
**தன்அடைந்து வாழும்**
**எனக்கே.**

இந்த வாழ்வு நிறைவு பெற்றதா? வாழாத வாழ்வு வாழாமல் உண்மையான வாழ்வு வாழத் தலைப்பட்டார் அம்மையார்.

இத்தனையும் இறைவன் திருவருளால் அமைந்தனவே. ஆனால் இது போதுமா? அவன் அருளை முற்றப் பெற வேண்டாமோ? அவனுடைய பெருங் கருணையிலே முக்குளித்துத் தம்மை இழக்க வேண்டாமோ! எல்லாம் இழந்து நிற்கும் நிலையைப் பெற வேண்டாமோ?

அத்தகைய நிலை பெறுவதற்குரிய அருளை வழங்கவில்லையே என்று ஏங்கித் தம் ஏக்கத்தை இறைவனிடம் முறையிடுகிறார். ''எத்தனையோ பேருக்கு முழு அருளைத் தந்திருக்கிறாயே! உன்னையன்றிப் பிறர் யாரையும் அடையாமல் இருக்கும் எனக்கு மட்டும் இன்னும் அந்த அருளை வழங்காமல் இருக்கிறாயே! அவ்வாறு இருப்பதற்குக் காரணம் என்ன? என்னுடைய குறையா? அல்லது உன்னுடைய புறக்கணிப்பா?'' என்று கேட்கிறார்.

**எனக்கே அருளாவாறு என்கொல்?**

இறைவன் அருளை முற்றும் பெற்றிலேன் என்ற ஏக்கத்தால் இப்படிக் கேட்கிறார். இந்த ஏக்கம் இருந்தால்தான் மேலும் மேலும் உயர்ந்து கொண்டே இருக்க முடியும்.

**தனக்கே அடியனாய்த் தன்அடைந்து வாழும்**
**எனக்கே அருளாவாறு என்கொல்?—**
**மனக்கு இனிய**
**சீராளன், கங்கை மணவாளன், செம்மேனிப்**
**பேராளன், வானோர் பிரான்.**

[மனதுக்கு இனியனவாக உள்ள கல்யாண குணங்களை உடையவனும், கங்கா தேவியின் மணவாளனும், செம்மையான திருமேனியையுடைய பெரியவனும், தேவர்களுக்கெல்லாம் உபகாரியுமாக இருக்கின்ற சிவபெருமான், வேறு யாரையும் அணுகாமல் தனக்கே அடிமைப் பட்டேனாய்த் தன்னை அடைந்து வாழும் அடியேனுக்கே அருளாமல் இருக்கும் இயல்பு ஏன்? அதற்கு என்ன காரணம்?

தனக்கே; ஏகாரம், பிரிநிலை, அடியன்-அடியேன்; தன்மை ஒருமை; ஆண்பாற் படர்க்கை அன்று. தன்-தன்னை. எனக்கே: ஏகாரம், பிரிநிலை; தேற்றமும் ஆம். அருளா ஆறு-அருளாத வண்ணம். மனக்கு-மனதுக்கு; சாரியை தொக்கது. சீர்-பண்புகள். பிரான்-உபகாரி.]

அற்புதத் திருவந்தாதியில் 44-ஆம் பாடல் இது.



கற்க கசடறக் கற்பவை கற்றபின்
நிற்க அதற்குத் தக.

—திருக்குறள்

உலகம் தோன்றிய காலம்முதல் நாம் கேட்டுவரும் உபதேசம், பரஸ்பரம் அன்பு செய்யுங்கள் என்பதே.

—கிறிஸ்தவம்

# மனிதன் தனது விதியைத் தானே அமைக்கிறான்

சுவாமி விவேகானந்தர்

1

முகமது நபியோ, புத்தரோ நல்லவராக வாழ்ந்தார் என்பதை நான் ஏன் பொருட்படுத்த வேண்டும்? அது என்னுடைய நல்ல இயல்பையோ, கெட்ட இயல்பையோ மாற்றி அமைக்கப் போகிறதா? நமது நன்மைக்காக, நமது விருப்பத்திற்காக நாம் நல்லவர்களாக இருப்போம்.

அந்தக் காலத்தில் யாரோ ஒருவர் நல்லவராக இருந்தார் என்பதற்காக நாம் நல்லவராக இருக்க வேண்டியதில்லை.

2

நாம் இப்போது இருக்கும் நிலைமைக்கு நாமே பொறுப்பாளிகள். நாம் எப்படி எல்லாம் இருக்க வேண்டும் என்று விரும்புகிறோமோ, அப்படி நம்மை அமைத்துக் கொள்ளும் ஆற்றல் நம்மிடமே இருக்கிறது. நாம் இப்போது இருக்கும் நிலை நம்முடைய முன்வினைகளின் பலன் என்றால், எதிர்காலத்தில் நாம் எப்படி எல்லாம் இருக்க வேண்டுமென்று விரும்புகிறோமோ, அதை நாம் நம்முடைய தற்போதைய செயல்களால் உண்டாக்கிக்கொள்ள முடியும் என்பது வெளிப்படை. எனவே எப்படி நடந்து கொள்ள வேண்டும் என்பதை நாம் தெரிந்துகொள்ள வேண்டும்.

3

இந்த மனித உடல்தான் பிரபஞ்சத்திலேயே மிகச் சிறந்த உடலாகும். மனிதனே மேலான ஜீவன். எல்லா மிருகங்களைக் காட்டிலும், எல்லா தேவர்களைக் காட்டிலும் மனிதன் உயர்ந்தவன். மனிதனைவிட உயர்ந்தவர் யாருமே இல்லை.

4

இயற்கையை மீறி மேலெழுவதற்குப் போராடிக் கொண்டிருக்கும் வரையில்தான், மனிதன் மனிதனாக இருக்கிறான். இந்த இயற்கை அகம், புறம் என்று இரண்டு வகைப்படும். பல்வேறு நாடுகளின் வரலாற்றை ஆழ்ந்து படித்துப் பார்த்தால்—இயற்கையை வென்று தங்களை உயர்த்திக் கொள்ள முயற்சி செய்யும் மக்கள் அதிகரிக்கும்போதுதான் ஒரு நாட்டிற்கு எழுச்சி வருகிறது—என்பதை எப்போதும் நாம் காணலாம். இலௌகிக லாபத்தில் மட்டும் கருத்துச் செலுத்துபவர்கள் (utilitarians), மெய்ப்பொருளை நாடும் இந்த முயற்சி பயனற்றது என்று எவ்வளவுதான் சொன்னாலும், அத்தகைய முயற்சி நின்று விடும்போது சமுதாயத்திற்கு அழிவு ஆரம்பித்து விடுகிறது. அதாவது, ஒவ்வொரு மனித இனத்தின் வலிமைக்கும்



உயிர்நாடி அதன் ஆன்மீகப் பண்பில்தான் அடங்கி இருக்கிறது. என்று ஆன்மீகம் தனது செல்வாக்கை இழந்து உலகாயுதம் தலையெடுக்க ஆரம்பிக்கிறதோ, அன்று முதல் அந்த சமுதாயத்திற்கு அழிவும் ஆரம்பித்து விடுகிறது.

5

இந்த உலகம் மிகப் பெரிய ஓர் உடற்பயிற்சிக் கூடம். இங்கு நாம் நம்மை வலிமையுடையவர்களாக்கிக் கொள்வதற்காக வந்திருகிறோம்.

6

நன்மை தரக்கூடிய எல்லாச் சமுதாய மாற்றங்களும், உள்ளே இருந்து இயங்கிக் கொண்டிருக்கும் ஆன்மீகச் சக்திகளின் வெளித் தோற்றங்களே ஆகும். இந்த சக்திகள் வலிமையுடையதாகவும் சரிவர பொருத்தமாக அமையக் கூடியதாகவும் இருந்தால், சமுதாயமும் தன்னை அதற்கேற்றபடி அமைத்துக் கொள்ளும்.

ஒவ்வோர் மனிதனும் தன்னுடைய சொந்த முக்திக்காகத் தானே வேலை செய்தாக வேண்டும். இதைத் தவிர வேறு வழியில்லை. தனி

மனிதனுக்குப் பொருந்தும் இந்த உண்மை நாடுகளுக்கும் பொருந்தும்.

. . . . சமுதாயத்தில் இருந்து வரும் ஸ்தாபனங்களிலுள்ள குறைபாடுகளைச் சுட்டிக் காட்டுவது மிகவும் எளிது. ஏனென்றால், எல்லா நிறுவனங்களும் அதிக அளவிலோ குறைந்த அளவிலோ குறைபாடுடையவைகளாகவே இருக்கின்றன. ஆனால் தனியொரு மனிதனுக்கு — அவன் எத்தகைய நிறுவனத்தின் ஆதிக்கத்தின் கீழ் உட்பட்டு வாழ்ந்த போதிலும், அவன் தனது குறைபாடுகளை நீக்கிக் கொள்வதற்கு யார் ஒருவர் உதவி செய்கிறாரோ, அவரே மனித சமுதாயத்திற்கு உண்மையான நன்மை செய்பவராவார்.

தனி மனிதர்களின் நிலை உயர்த்தப்பட்டால், தேசமும் அதன் நிறுவனங்களும் உயர்வடைந்தே தீரும்.

**7**

உனக்குள் இருக்கும் ஆற்றல் புறத்தில் வெளிப்படும் வகையில் நீ வளர வேண்டும். வேறு எவரும் உனக்குக் கற்பிக்கவும் முடியாது. உன்னை ஆன்மீகவாதி ஆக்கிவிடவும் முடியாது. உனது சொந்த ஆன்மாவைத் தவிர வேறு ஆசிரியர் யாருமில்லை

**8**

மக்கள் பொதுவாக வாழ்க்கையிலுள்ள குறைபாடுகளை எல்லாம் தங்களுடன் வாழ்பவர்கள் மீதோ, அல்லது அது தவறினால் தெய்வத்தின் மீதோ சுமத்துகிறார்கள். அல்லது புதிதாக அவர்கள் ஏதோ பேய் பிசாசு என்று கற்பித்துக் கொண்டு, அதைத் தலைவிதி என்று சொல்கிறார்கள்.

விதி என்றால் என்ன? அது எங்கே இருக்கிறது? எதை விதைத்தோமோ, அதைத்தான் அறுவடை செய்கிறோம். நமது விதியை நாமே வகுத்துக் கொள்கிறோம். எனவே, அதன் பொருட்டுத் தூற்றுவதற்கும் ஒருவருமில்லை; பாராட்டுவதற்கும் ஒருவருமில்லை. காற்று வீசியபடி இருக்கிறது. பாய்மரங்களை விரித்துக் காற்றைச் சாதகமாகப் பயன்படுத்திக் கொள்ளும் கப்பல்கள், தங்கள் வழியே முன்னேறிச் செல்கின்றன. ஆனால் பாய்களைச் சுருட்டி வைத்துள்ள கப்பல்கள் காற்றை ஏற்றுப் பயன் பெறுவதில்லை. இது காற்றினுடைய குற்றமாகுமா?

**9**

'நான் அனுபவித்துக் கொண்டிருக்கும் இந்தத் துன்பம், என்னுடைய சொந்தச் செயல்களாலேயே உருவாக்கப்பட்டிருக்கிறது. இந்த ஒரு நிலையே என் ஒருவனால் மட்டுமே அது நீக்கப்பட வேண்டும் என்பதைக் காட்டுகிறது' என்று சொல். நான் எதைப் படைத்தேனோ அதை என்னால் அழிக்கவும் முடியும். பிறரால் படைக்கப்பட்ட ஒன்றை ஒருபோதும் என்னால் அழிக்க முடியாது. எனவே, எழுந்து நில், தைரியமாக இரு, வலிமையுடன் இரு. பொறுப்பு முழுவதையும் உன் தோள் மீதே சுமந்து கொள். உனது விதியைப் படைப்பவன் நீயே என்பதைப் புரிந்து கொள். உனக்குத் தேவையான எல்லா வலிமையும் உதவியும் உனக்குள்ளேயே குடிகொண்டு இருக்கிறது.

**10**

உனது எதிர்காலத்தை நீயே உருவாக்கு. ஏற்கெனவே நடந்து முடிந்ததைத் குறித்து வருந்தாதே. எல்லையற்ற எதிர்காலம் உன் முன்னால் விரிந்து பரந்திருக்கிறது. உன்னுடைய ஒவ்வொரு சொல்லும் சிந்தனையும் செயலும், அதற்கேற்ற பலனைத் தரும் வகையில் உன் மனதில் இடம்பெறும் என்பதை எப்போதும் நீ நினைவில் வைக்க வேண்டும். உனது தீய எண்ணங்களும் செயல்களும் புலிகளைப்போல உன்மீது பாய்வதற்குத் தயாராக இருக்கின்றன. அதைப் போலவே உனது நல்ல எண்ணங்களும் செயல்களும், ஒரு நூறாயிரம் தேவதைகளின் ஆற்றலுடன் உன்னை எப்போதும் நிரந்தரமாகப் பாதுகாப்பதற்குத் தயாராக இருக்கின்றன என்னும் ஊக்கம் தரும் நம்பிக்கையும் இருக்கிறது. இதை நீ எப்போதும் நினைவில் கொள்ள வேண்டும்.

**11**

ஏன்? எதற்கு? என்ற ஆராய்ச்சிகளில் ஈடுபடுவது நமது வேலையன்று. மாறாக, செயலில் ஈடுபட்டுச் செத்து மடிவது ஒன்றுதான் நமது கடன். மகத்தான காரியங்களைச் செய்வதற்காக ஆண்டவனால் நாம் தேர்ந்தெடுக்கப்பட்டவர்கள் என்றும், அவைகளை நாம் செய்து முடிப்போம் என்றும் உறுதியாக நம்பு.

**12**

துரதிர்ஷ்டவசமாக இந்த வாழ்க்கையில்,

மக்களில் மிகப் பெரும்பாலானவர்கள் எந்தவிதமான ஓர் உயர்ந்த இலட்சியமும் இல்லாமல், இருளடைந்த இந்த வாழ்க்கையில் தட்டித் தடுமாறிச் சென்று கொண்டிருக்கிறார்கள். உயர்ந்த இலட்சியம் கொண்ட மனிதன் ஒருவன் ஆயிரம் தவறுகள் செய்தால், இலட்சியம் ஒன்றும் இல்லாமல் வாழ்பவன் ஐம்பதாயிரம் தவறுகள் செய்வான் என்று நான் உறுதியாகச் சொல்வேன். எனவே உயர்ந்த ஓர் இலட்சியத்தைக் கொண்டிருப்பது மேலானது.

13

மனிதன் இயற்கையை எதிர்த்துப் போராட ஆரம்பிக்கிறான். அதில் அவன் பல தவறுகளைச் செய்கிறான். அதனால் துன்பப்படுகிறான். ஆனால் இறுதியில் அவன் இயற்கையை வென்று தனது சுதந்திரத்தைப் பெறுகிறான். அவன் சுதந்திரத்தை அடைந்தவுடனே இயற்கை அவனுக்கு அடிமையாகி விடுகிறது.

14

இயற்கையின் விதிகளுக்குக் கீழ்ப்படிந்து நடப்பதுதான் சுதந்திரம் என்ற கருத்தை நான் ஒப்புக் கொள்ள மாட்டேன். அந்தக் கருத்தின் பொருள் என்ன என்று எனக்குப் புரியவில்லை. மனித வளர்ச்சியின் வரலாற்றின் படி, இயற்கைக்குக் கீழ்ப்படியாமல் இருப்பது தான் மனித சமுதாயத்தின் வளர்ச்சியாகும். அதுதான் மனித சமுதாயத்தின் வளர்ச்சியை ஆக்கியமைத்திருக்கிறது.

15

நமது வாழ்க்கை சிறந்ததாகவும் தூய்மை உடையதாகவும் இருந்தால் மட்டும்தான், உலகமும் சிறப்பும் தூய்மையும் பெற்றதாக இருக்க முடியும். அது காரியம், நாம் அதை விளைவிக்கும் காரணம். எனவே நம்மை நாம் தூய்மைப் படுத்திக் கொள்வோமாக. நம்மை நாம் பரிபூரணர்களாக்கிக் கொள்வோமாக.

16

சண்டையிடுவதிலும் குறை சொல்லிக் கொண்டிருப்பதிலும் என்ன பயன் இருக்கிறது? நிலைமையை சீர்படுத்தி அமைக்க அவை நமக்கு உதவப் போவதில்லை.

தான் செய்ய வேண்டிய கடமையாக அமையும் சிறிய அற்பமான வேலைகளுக்கு முணுமுணுப்பவன் எல்லாவற்றுக்கும் முணுமுணுக்கவே செய்வான். எப்போதும் முணுமுணுத்தபடியே அவன் துன்பம் பொருந்திய வாழ்க்கை வாழ்வான். அவன் தொடுவதெல்லாம் தோல்வியிலேயே முடியும். ஆனால் தனது கடமைகளைத் தவறாமல் ஒழுங்காகச் செய்து கொண்டு, தன்னால் ஆனவரை வாழ்க்கையில் முயன்று கொண்டிருப்பவன் கட்டாயம் ஒளியைக் காண்பான்; மேலும் மேலும் உயர்ந்த கடமைகள் அவனது பங்காக அவனைத்தேடி தானாக வந்து சேரும்.

17

மனிதன்தானே பணத்தை உண்டுபண்ணுகிறான்? பணம் மனிதனை உண்டுபண்ணியதாக எங்கேயாவது, எப்போதாவது நீ கேள்விப்பட்டிருக்கிறாயா? நீ உன்னுடைய எண்ணங்களையும் சொற்களையும் முற்றிலும் ஒன்றாக இருக்கும்படி செய்தால், அதைச் செய்ய உன்னால் இயலுமானால், பணம் தண்ணீரைப் போல தானாக உனது காலடியில் வந்து கொட்டும்.

18

இந்தப் பிரபஞ்சத்திலேயே நன்மைக்கு அழைத்துச் செல்லும் பாதைதான் மிகவும் கரடு முரடாகவும் செங்குத்தானதாகவும் இருக்கிறது. அந்தப் பாதையில் இத்தனை பேர் வெற்றி பெற்றிருக்கிறார்களே என்பதுதான் வியப்புக்குரிய விஷயம். பல பேர் தோல்வியடைந்து விழுந்து போனதில் ஆச்சரியமே இல்லை. ஆயிரம் முறை இடறி விழுவதன் மூலம் தான் நல்ல ஒழுக்கத்தை உறுதியாக நிலைநிறுத்த வேண்டும்

19

ஒவ்வொரு பணியும் மூன்று நிலைகளைக் கடந்தாக வேண்டும். ஏளனம், எதிர்ப்பு, பிறகு கடைசியில் ஏற்றுக்கொள்ளப்படுதல். தனது காலத்தைவிட்டு முற்போக்காகச் சிந்திக்கும் ஒவ்வொரு மனிதனும் நிச்சயம் தவறாகவே புரிந்து கொள்ளப்படுவான். எனவே எதிர்ப்பும், அடக்குமுறையும் வரவேற்கத்தக்கவையே.

ஆனால் நான் மட்டும் உறுதியாகவும், தூய்மையாகவும், கடவுளிடம் அளவுகடந்த நம்பிக்கை உடையவனாகவும் இருக்க வேண்டும். அப்படியிருந்தால் இந்த இடைஞ்சல்கள் எல்லாம் மறைந்து போய்விடும்.





# ஸ்ரீ ராமகிருஷ்ண மடம், சென்னை 600004

**(16—10—77 முதல் 15—11—77 வரை)**

**ஸ்ரீ ஸ்ரீ துர்க்கா பூஜை:**

| | |
|---|---|
| *18–10–77 செவ்வாய்:* | *ஸ்ரீ துர்க்கா ஷஷ்டி*<br>*மாலை 5.30 ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாம அர்ச்சனை* |
| *19–10–77 புதன்:* | *மகா அஷ்டமி: சந்தி பூஜை (காலை 4.59 முதல் 5.47 வரை)*<br>*விசேஷ பூஜை — காலை 8 மணி* |
| *21–10–77 வெள்ளி:* | *விஜயதசமி (மாலை வழிபாட்டிற்குப் பிறகு சாந்தி ஜலம்)* |

**இந்திய தத்துவஞானம் தொடர் சொற்பொழிவு**

**வைசேஷிகம்**

| | |
|---|---|
| *23–10–77 ஞாயிறு:* | *தலைவர்: சுவாமி தபஸ்யானந்தர்* |
| **பேசுவோர்:** | *திரு வி. ஆர். கல்யாணசுந்தர சாஸ்திரிகள்*<br>*திரு கே. பாலசுப்பிரமணியம்* |
| **சத் சங்கம்:** *ஞாயிறுதோறும்* | *மாலை 4 மணி முதல் 8 மணி வரை* |
| *மாலை 4 முதல் 4.20 வரை* | *ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாம பாராயணம் (23-10-77 & 13-11-77)*<br>*ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாம பாராயணம் (16-10-77 & 6-11-77)* |
| *மாலை 4.30 முதல் 5.30 வரை* | *சொற்பொழிவு (தமிழ்)*<br>*1.* **நாராயணீயம்**—*திரு. க. கோதண்டராமன் (16–10–77)*<br>*2.* **ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாமம்**<br>*திரு V. R. கல்யாணசுந்தர சாஸ்திரிகள் (23-10-77)*<br>*3.* **ஸ்ரீமத் பாகவதம்**—*திரு 'அண்ணு' சுப்ரமண்யம் (6-11-77)*<br>*4.* **ஸ்ரீமத் ராமாயணம்**—*டாக்டர் என். வீழிநாதன் (13–11–72)* |
| *மாலை 5.35 முதல் 6.30 வரை* | *சொற்பொழிவு (ஆங்கிலம்)*<br>**ஸ்ரீமத் பகவத்கீதை**—*சுவாமி கபீரானந்தர்* |
| **சிறப்புச் சொற்பொழிவுகள்:** | *1.* **இராமாயணத்தில் ஆராய்ச்சி**<br>*திரு. பி. ராமகிருஷ்ணன் (22–10–77)* |
| *சனி மாலை 5.45 மணிக்கு* | *2.* **ஸ்ரீமத் பாகவதம்**—*சுவாமி கோலோகானந்தர் (29-10-77 & 15-10-77)*<br>*3.* **இராமாயணத்தில் ஆராய்ச்சி**—*திரு. பி. இராமகிருஷ்ணன் (5–11–77)*<br>*4.* **நாராயணீயம்**—*திரு. க. கோதண்டராமன் (12–11–77)* |

**வார நாட்களில் நடைபெறும் உரை நிகழ்ச்சிகள்**—*(மாலை 5-30)*

| | |
|---|---|
| *திங்கள்:* | *(ஆங்கிலம்) ஈசாவாஸ்ய உபநிஷதம்—சுவாமி கீர்த்திதானந்தர்* |
| *செவ்வாய்:* | *(ஆங்கிலம்)* **ஸ்ரீமத் அத்யாத்ம ராமாயணம்**—*சுவாமி கபீரானந்தர்* |
| *புதன்:* | *(தமிழ்)* **மகாபாரதம்**—*திரு 'அண்ணு' சுப்ரமண்யம்* |
| *வியாழன்:* | *(ஆங்கிலம்)* **ஸ்ரீமத்பாகவதம்**—*சுவாமி கோலோகானந்தர் (3–11–77 & 17–11–77)*<br>*தியாகப் பிரம்மம் (தெலுங்கு)*<br>*—சுவாமி சுவாத்மானந்தர் (27–9–77 & 10–11–77)* |
| *வெள்ளி:* | *(தமிழ்)* **ஸ்ரீ ராமகிருஷ்ணரின் உபதேசங்கள்**<br>—பிரம்மசாரி நிரஞ்ஜன சைதன்யா |
| *வெள்ளி:* | *(ஆங்)* **ஸ்ரீமத் பகவத்கீதை** *மாலை 6.30—சுவாமி கோலோகானந்தர்*<br>*(ஸ்ரீராமகிருஷ்ண மந்திரம், 18, தெற்குமாட வீதி, திருவல்லிக்கேணி.)* |
| **விசேஷ தினங்கள்:** | *அந்தர் யோகம் (சாதனை தினம்)—ஞாயிறு (23–9–77)*<br>*ஸ்ரீ ஸ்ரீ லட்சுமி பூஜை—புதன் (26–10–77)*<br>*ஸ்ரீ ஸ்ரீ காளி பூஜை—வியாழன் (10–12–77)*<br>*ஸ்ரீராமநாம சங்கீர்த்தனம்:* **ஏகாதசி தினங்களில்**<br>*ஆரதிக்குப் பிறகு (22–10–77 & 7–11–77)* |

*தலைவர்,*
ஸ்ரீ ராமகிருஷ்ண மடம், சென்னை-600 004

தொலைபேசி: **71231**

## ஒரு வேண்டுகோள்

★ அன்பர்கள் தங்களுடைய சந்தாவைச் செலுத்துவதுடன், மேலும் சிலரை சந்தாதாரர்களாகச் சேர்த்துத் தருவது ஒரு நல்ல தொண்டாகும். இதன் மூலம் நமக்கும் மற்றவர்களுக்கும் நாம் நன்மையைச் செய்து கொள்கிறோம்.

★ தனிப்பிரதி விற்பனையோ, சந்தா சேர்க்கும் ஏஜண்டுகளோ குறிப்பிடத் தக்க அளவுக்கு இல்லாததால், வாசக அன்பர்களே நண்பர்களைச் சந்தாதாரர்களாக்கி ஒத்துழைக்க வேண்டுகிறோம்.

★ ஒவ்வொரு ஆண்டும் சந்தாவைச் செலுத்திப் புதுப்பிப்பதற்குப் பதிலாக, எப்போதும் பத்திரிகை வந்து கொண்டிருக்கும் வகையில் ஆயுள் சந்தாதாராகச் சேர்ந்து விடுவது நலம். ஆயுள் சந்தாதாரராக வசதி இல்லாத அன்பர்கள், சில ஆண்டுகளுக்குச் சேர்ந்தாற்போலவும் சந்தாவை முன்னதாகச் செலுத்தலாம்.

★ சந்தாதாரர்களை அதிகப்படுத்துவதில் தீவிர முயற்சி செய்து வருகிறோம். அன்பர்கள், தங்களின் பங்காக இந்தத் தெய்விகக் கைங்கரியத்தில் கல்வி ஸ்தாபனங்கள், சத்சங்கங்கள் முதலியவைகளுக்குப் பத்திரிகை போய்க்கொண்டிருக்கும்படி செய்யலாம். இது மாதந்தோறும் தாங்கள் அளிக்கும் மேலான நன்கொடையாகும்.

★ நண்பர்களுக்கும், அபிமானிகளுக்கும் பத்திரிகை போகும்படி செய்தால் ஒவ்வொரு மாதமும் அவர்களுக்கு நல்ல வெகுமதி அளித்ததாக அமையும்.

★ பந்துக்களுக்கும், குமாரத்திகளுக்கும் பத்திரிகை அனுப்பச் செய்தால் மாதந்தோறும் தங்களை ஞாபகப்படுத்தும் சிறந்த சன்மானமாகும்.

★ பெரியோர்கள், இந்த வேண்டுகோளைத் தங்களுக்கு ஏதோ சம்பந்தமில்லாதது என்று புறக்கணித்துவிடாமல், மேலும் சந்தாதாரர்களைச் சேர்த்துத் தரும் விஷயத்தில் தங்களால் இயன்ற ஒரு சிறிதளவிற்காகிலும் முயற்சி செய்வார்கள் என்று நம்புகிறோம். **குறைந்தது மூன்று சந்தாதாரர்களையாவது சேர்த்துத் தருவது பெரிய உபகாரமாக இருக்கும்.** இதன் மூலம் இன்றைய சமுதாயத்தின் சூழ்நிலையில் நல்ல கருத்துகள் வளர அரும்பெரும் தொண்டு செய்தவர்களாகிறீர்கள்.

### சந்தா விவரம்:

**வருட சந்தா (சிறப்பு மலர் உட்பட) ரூ. 7-00; தனிப்பிரதி 70 காசு; ஆயுள் சந்தா: ரூ. 100 (ஆயுள் சந்தாவைப் பகுதிப் பகுதியாகவோ, மாதம் ரூ. 10 ஆகவோ, மொத்தமாகவோ செலுத்தலாம்.)**

★ சந்தாதாரராக விரும்புபவர்களும் பத்திரிகை விற்பனையாளர்களும் பின்வரும் முகவரிக்குத் தொடர்பு கொள்ளலாம்.

புதிய சந்தாதாரர்கள் பணம் அனுப்பி வைக்கும்போது, புதிய சந்தா என்று குறிப்பிட்டு எழுதும்படி கேட்டுக்கொள்ளப்படுகிறார்கள். பழைய சந்தாதாரர்கள், தமது கடிதப் போக்குவரத்துகள் எல்லாவற்றிலும் சந்தா எண்ணையும் முழு விலாசத்தையும் அவசியம் குறிப்பிட்டு எழுத வேண்டுகிறோம்.



ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம் காரியாலயம்
**ஸ்ரீ ராமகிருஷ்ண மடம்**
மயிலாப்பூர் : : சென்னை-600 004

ஆசிரியர்: சுவாமி சித்கனானந்தர்; துணை ஆசிரியர்: ரா. ராமகிருஷ்ணன்
பதிப்பாளர்: சுவாமி சித்கனானந்தர், ஸ்ரீ ராமகிருஷ்ண மடம், சென்னை 600004
அச்சிடுபவர்: S. ராமஸ்வாமி, ராஜ்ஸ்ரீ பிரிண்டர்ஸ், 97 லாய்ட்ஸ் ரோடு, சென்னை 600086.